Regd. No. M. 4392



---

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.





ஏப்ரல்
13-ந்தேதி
முதல்

எல்லா முக்கிய
இடங்களிலும்
நடைபெறுகிறது.

பக்ஷிராஜா பிலிம்ஸ்

# ஜகதலப்ரதாபன்

டைரக்ஷன் :
ஸ்ரீராமுலு நாயுடு

நாராயணன் கம்பெனி
வெளியீடு.

J.T.40. P.S.M.Co

முடிவு தேதி நெருங்குகிறது!

# "கல்கி"

சிறு கதைப் போட்டி

**பரிசு ரூ. 1000**

**முதல் பரிசு ரூ. 500**

ஐந்து பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ. *100*

•

**கதைகள் எல்லாம் *1944*-ம் வருஷம் ஏப்ரல்மீ *30*உக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும். கவரின் மேல் "சிறு கதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.**

•

மற்ற விவரங்கள் ஏப்ரல்மீ 9உ "கல்கி" உள் பக்க அட்டையைப் பார்த்துத் தெரிந்து கொள்ளவும்

•

மானேஜர், "கல்கி"

---

சந்தோஷச் செய்தி!

ஏப்ரல் 1உ முதல்

# "கல்கி"

**வாரப் பதிப்பாக வெளியாகி வருகிறது.**

•

பிரதி வாரமும் சனிக்கிழமை யன்று எல்லா இடங்களிலும் கிடைக்கும்.

•

**சந்தா விவரம்:**

வருஷ சந்தா ரூ. *13—0—0*

6 மாத சந்தா ரூ. *6—8—0*

தனிப் பிரதி அணா *0—4—0*

*6 மாதத்திற்குக் குறைந்து சந்தா எடுத்துக் கொள்ளப்பட மாட்டாது.*

•

மானேஜர்,

"கல்கி" சென்னை.



# இன்றே செய்ய வேண்டியது.

ரொம்பவும் திடகாத்திரமா யுள்ளவர்களில்கூட, இன்றைக்கு இருப்போரை நாளைக்கு காணோம். அது ஒன்றே நீங்கள் இன்ஷ்யூர் செய்ய வேண்டிய அவசியத்திற்கு போதுமானது.

தலைவிதி போல் என்று இந்த விஷயத்தில் தள்ளி போட்டுக் கொண்டு போவதில் என்ன லாபம். நாள் ஆகஆக,நீங்கள் இன்ஷ்யூர் செய்துகொள்ள முடியாமலே போய் விடலாம். அது நீங்கள் உடனே செய்ய வேண்டிய காரியம்.



## யுனைடெட் இந்தியா லைப்

### அஷ்யூரன்ஸ கம்பெனி லிமிடெட்

யுனைடெட் இந்தியா லைப் பில்டிங்

எஸ்பிளனேட் :: மதராஸ்.

இந்தியா பூராவும் பிராஞ்சுகளும் ஏஜென்ஸிகளும் உண்டு.

# தேயிலையின் சரிதம் - 8



தேநீர் ருசி பார்க்கப்படுகிறது.

## பக்குவப்படுத்தல்

நமது தோட்டங்களிலிருந்து வந்த தேயிலைகளை, தொழிற்சாலையில் தேர்ச்சியடைந்தவர்கள் வெவ்வேறு ரகங்களை ஒன்று சேர்த்து பக்குவப்படுத்தி ருசி பார்க்கிறார்கள். ருசி பார்த்து அவைகளின் நற்சுவையை அறிந்த பிறகே மொத்தமாக பக்குவம் செய்தல் ஆரம்பிக்கப்படுகிறது.

தேயிலையின் ரகம், வாசனை முதலியவை ஒரே சீராக காக்கப்படுகின்றன.

பக்குவப்படுத்தும் இயந்திரத்திலிருந்து எடைபோடும் இயந்திரத்தில் கொட்டப்படுகிறது. இதிலிருந்து ஒவ்வொரு பொட்டலங்களிலும் சரியான அளவு தேயிலை நிரப்பப்பட்டு முத்திரையிடுவதற்கு தயாராகிறது. இந்த தேயிலைகள் எல்லாம் இயந்திரத்தினால் நடப்பதால் கைபடுவதில்லை.

மரப்பெட்டிகளில் அடக்கம் செய்யப்பட்டு எங்கள் கிடங்குகளுக்குப் போகத் தயாராகிறது. அங்கிருந்து வெகு துரிதமாய் எங்கள் விற்பனையாளர்கள் மூலம் இந்தியா முழுவதும் வினியோகப் படுத்தப்படுகிறது.

உங்கள் கடைக்காரரிடமிருந்து இதோ புதிதாய் உங்களுக்கு அறிமுகமான மிகவும் பிடித்தமான பொட்டலங்களை வாங்குவீர்கள்.

# ப்ரூக் பாண்ட்

# பலசரக்கு

சென்னையில் ஒரு பொதுக் கூட்டத்தில் ஸ்ரீ ராஜாஜி பேசிக் கொண்டிருக்கும் பொழுது, சில காலிகள் ராஜாஜியின் மீது கற்களை வீசி எறிந்தனர்.



பக்கத்திலிருந்த பலருக்குப் பயமாகப் போய்விட்டது. கற்களை வீசி எறிந்தவர்களை அடக்கப் போனார்கள். அதற்கு ராஜாஜி, "அவர்களை விட்டு விடுங்கள். அவர்களுக்கு அவ்வளவு தூரம் குறி பார்த்து அடிக்கத் தெரிந்தால் நமக்கு எப்பொழுதோ சுயராஜ்யம் கிடைத்திருக்குமே!" என்றாராம்.



ஹிட்லரைப் பற்றிய ஒரு ஆங்கில ஹாஸ்யத் துணுக்கு வருமாறு:

ஹிட்லர் செத்ததும் நரகத்துக்குப் போனாராம். நரகத் தலைவனான சாத்தான் இவரைக் கண்டதும், அவரைச் சற்றுக் காத்திருக்கச் சொல்லி விட்டு உள்ளே போய் ஒரு விறகுக் கட்டும், நெருப்புப் பெட்டியும் கொண்டு வந்து கொடுத்தானாம். ஹிட்லர் எதற்கு என்று கேட்டதற்கு, "உனக்கு இந்த நரகம் போதாது. உனக்கு என்று நீயே தனி நரகம் சிருஷ்டித்துக் கொள்" என்று சொன்னானாம்.





மாக்ஸ் போயர் என்னும் அமெரிக்க குஸ்திச் சண்டை வீரர் இந்த யுத்தம் ஆரம்பித்ததற்குத் தாம் தான் காரணம் என்று கூறுகிறார். அவர் மாக்ஸ் ச்மெலிங் என்னும் ஜெர்மன் பயில்வானைத் தோற்கடித்ததால் ஹிட்லருக்குக் கோபம் வந்து விட்டதாம். இதற்கு அடுத்த வருஷம் கார்னிரா என்னும் இத்தாலியப் பயில்வானைத் தோற்கடித்ததால் முஸோலினிக்குக் கோபம் வந்துவிட்டதாம். அதற்குப் பிறகு ஒரு ஜப்பானிய பயில்வானைத் தோற்கடித்தாராம். அதனால் டோஜோவுக்குக் கோபம் வந்துவிட்டதாம்.



அமெரிக்க ஆசிரியர் கிப்ளிங் என்பவர் ஏராளமான புத்தகங்கள் எழுதிப் பணம் சம்பாதித்து வந்தார். அவர் எழுத்தில் மோகம் கொண்ட வாசகர்கள் அவருக்குத் தபால்கள் எழுதிக் கொண்டே யிருந்தார்கள்.

ஒரு கடிதத்தில் "தாங்கள் எழுதும் ஒரு வார்த்தைக்கு 25 டாலர் விதம் உங்களுக்கு வரும்படி என்று கேள்விப் படுகிறேன். இந்தக் கடிதத்துடன் தங்களுக்கு 25 டாலர் அனுப்பியிருக்கிறேன். பதில் எழுதவும்" என்றிருந்தது.



கிப்ளிங் "வந்தனம்" என்று ஒரே வார்த்தையில் பதில் எழுதி யிருந்தார்!



ஸால்ட் லேக் நகர கமிஷனர் அந்த நகரத்தின் நிர்வாகத்தில் என்னென்ன சிக்கனங்கள் செய்யலாம் என்பதற்காக ஒரு சிக்கனக் கமிட்டியைச் சிபார்சு செய்தார். அந்தச் சிக்கனக் கமிட்டி வந்ததும் முதல் காரியமாக "இந்த நகரத்துக்குக் கமிஷனர் அவசியமில்லை" என்று சிபார்சு செய்ததாம்.





சீனாவிலுள்ள டாக்டர்கள் உலகத்திலேயே மிகவும் கெட்டிக்காரர்களாயிருக்கவேண்டும் என்று பின்வரும் செய்தியிலிருந்து தெரிகிறது. ஏனெனில், அவர்களிடம் சிகிச்சைக்காக வரும் சீன ஸ்திரீகள் மிகவும் சங்கோஜப் பிராணிகளானபடியால் தங்களுக்கு என்ன வியாதி என்று வாயைத் திறந்து சொல்ல மாட்டார்களாம். கூடவே ஒரு பொம்மையை எடுத்து வந்து, தலைவலியென்றால் அந்தப் பொம்மையின் தலையையும் காதுவலி என்றால் காதையும் தொட்டுக் காண்பிப்பார்களாம். டாக்டர் இம்மாதிரி செய்கைகளிலிருந்து வியாதி என்ன என்பதை ஊகித்துக் கொண்டு மருந்து கொடுக்க வேண்டும்.



## சரஸ்வதி கான சபா,
## சிதம்பரம்



22—4—44 சனிக்கிழமை அமாவாசை யன்று மாலை 5-30 மணிக்கு

**ராஜா அண்ணாமலை டவுன் ஹாலில், உயர்தர சங்கீத கச்சேரி**



சங்கீத ரத்னாகர அரியக்குடி
ஸ்ரீ ராமானுஜய்யங்கார் — பாட்டு
சங்கீத ரத்ன மைசூர்
ஸ்ரீ சௌடய்யா — பிடில்
ஸ்ரீ பாலக்காடு மணி — மிருதங்கம்
ஸ்ரீ தேவக்கோட்டை
சுந்தரராஜ அய்யங்கார் — கஞ்சிரா

டிக்கட்கள் (வரியுள்பட):—
ரூ. 2—11—11; 1—9—11; 0—12—0.

ஆர். எஸ். ராமானுஜம், செக்ரடரி.

---

## இந்தியன் பாங்க்
லிமிடெட்.

தலைமை ஆபீஸ்:
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு :: மதராஸ்

லோகல் ஆபீஸ்கள்:
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மயிலாப்பூர், தியாகராய நகர், புரசவாக்கம், மவுண்ட் ரோடு.

தென்னிந்தியாவில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிரான்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

| | | |
|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | ரூ. | 1,00,00,000 |
| வழங்கி வாக்கவிக்கப்பட்ட மூலதனம் | ரூ. | 60,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் (31-12-43வரை) | ரூ. | 28,90,385 |
| ரிஸர்வ் நிதி | ரூ. | 30,50,000 |
| டெபாஸிட்கள் | ரூ. | 8,13,62,549 |

N. கோபால அய்யர், செக்ரடரி.

---

## தாயின் சந்தோஷம்



என் குழந்தையின் ஈரல் குலைகட்டி வியாதி சொஸ்தப் படுத்த முடியாதளவு முற்றி யிருக்கிறது என்றும், குணப் படுவது கஷ்ட மென்றும், எல்லோராலும் கருதப்பட்டது. ஆனால் ஜம்மியின் லிவர் க்யூரினால் என் குழந்தை காப்பாற்றப்பட்டதிற்கு அவருக்கு என் மனமார்ந்த வந்தனம். ஈரல் குலைகட்டிக்கு தாமதிக்காமல்



**ஜம்மியின் லிவர் க்யூர்**
**உபயோகியுங்கள்.**

ஜம்மி வெங்கடரமணய்யா அண்டு சன்ஸ்,
மைலாப்பூர் — மதராஸ்.
சப் ஆபீஸ்: கும்பகோணம்.
பிராஞ்சுகள்: கல்கத்தா, லக்னோ, பம்பாய், பெங்களூர், திருச்சினாப்பள்ளி, விஜயநகரம்.

“கண்கள் ஒன்றை ஒன்று கௌவி’ய தைத்தான் திரும்பத் திரும்பப் படித் தான். அடுத்த வீட்டிலிருந்து ஜானகி யின் மதுர கானம் அடிக்கடி கேட்கும். அதைக் கேட்கக் கேட்க அழகப்பனின் ஏக்கம் அதிகமாகும்.

இரவு முழுவதும் அழகப்பனுக்குத் தூக்கம் வராது. இன்பக் கனவுகள் கண்டு, ஆனந்த மடைவான். ஆனால் விழித்துக் கொண்டதும் என்னவோ வேதனைதான்.

அம்மா வந்து ஒரு வாரம் ஆயிற்று. அன்று காலை ஜானகியின் வீட்டு வாச லில் இரண்டு மூன்று வண்டிகள் வந்து நின்றன. அவள் வீட்டில் எல்லோரும் வீடு மாற்றிப் போகிறார்கள் என்று தெரிந்ததும் அழகப்பனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஏன் இப்படித் திடீரென்று கிளம்புகிறார்கள் என்பது தான் அவனுக்குப் புரியவில்லை.

எங்கேயாவது ஜானகியின் தகப்ப னருக்கு மாற்றலாகி விட்டதா?

ஜானகியின் தம்பி காலையில் அவ னோடு சரியாகப் பேசவில்லை.

ஒருவேளை கோபித்துக்கொண்டு தான் வீட்டைக் காலி செய்கிறார்களோ?

அழகப்பன் துயரம் ததும்பும் முகத் துடன் அம்மாவை விசாரித்தான்.



கண்ணாடி சீப்புடன் பிரசன்னமாவாள் ......

“அடுத்த வீட்டை நான்தான் காலி செய்யச் சொன்னேன்!” என்றாள் அம்மா.

“ஏன் அம்மா அப்படிச் செய்தாய்?” என்று கேட்டான் அழகப்பன்.

“எல்லாம் உனக்காகத்தான் காலி பண்ணச் சொன்னேன்.”

“எனக்காகவா?”

“ஆமாம், நாம் அந்த வீட்டுக்குப் போயிடணும். எனக்கு இந்த வீடு பிடிக்கவில்லை.”

“உனக்கெந்த வீடுதான் பிடிக்கும்? இந்த வீட்டிற்கு என்ன குறை? பாவம்! அந்த வீட்டிலே குடியிருந்தவர்கள் எவ் வளவு கஷ்டப்பட்டுக் கொண்டு நமக் காகக் காலி பண்ணியிருக்கிறார்கள்! உனக்கென்ன தெரியும்?”

“போடா போ! இந்த வீடு ஆக்கங் கெட்ட வீடு. நீ ஒருநாளும் சந்தோஷமா இருக்க மாட்டேனென்கிறாய்! இந்த வீட்டுக்கு வந்ததிலே யிருந்து உன் உடம்பு இளைத்துத் துரும்பாய்ப் போச்சு! எல்லாம் இந்த வீட்டிலே குடி இருக்கிறதால்தானே!”

அழகப்பனுக்குக் குப்பென்று சிரிப்பு வந்தது. ஆனால் அவன் அதை வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

“என் உடம்புக்கு வீடு என்ன அம்மா பண்ணும்? போகட்டும்; நீ சொல்கிற படியே நாம் அந்த வீட்டுக்குப் போய் விடுவோம். ஆனால் நாம் அந்த வீட்டுக் குப் போய்விட்டால் இந்த வீடு காலி யாகத்தானே இருக்கும்? அவர்கள் இந்த வீட்டுக்கு வந்துவிடலாமே” என்றான் அழகப்பன்.

அவன் தாயார் முகத்தில் புன்னகை அரும்பிற்று.

“ஆஹா! அப்படியே செய்யலாம்!” என்றாள் தாயார்.

அவள் ஒரு வாரமாகச் சந்தேகப்பட்ட தற்குத் தகுந்தாற்போல் மேற்கண்ட விதம் அழகப்பன் பேசியதும், அவ ளுக்கு விஷயம் விளங்கிவிட்டது.

மேற்படி சம்பவம் நடந்த ஒரு மாதத்திற்கெல்லாம் அழகப்பனுக்கும் ஜானகிக்கும் சுப முகூர்த்தத்தில் கலி யாணம் நடந்தது. வீடு மாற்றினதும் அழகப்பனுக்கு நல்ல காலந்தான் என்பதில் என்ன சந்தேகம்?

# வீடு மாற்றம்

எஸ்தீத்தாரப்பன்

அழகப்பன் வீட்டிற்கு அடுத்த வீட்டில் ஜானகி தேவியின் பெற்றோர்கள் குடித்தனம் செய்ய ஆரம்பித்தார்கள். அவர்கள் வருவதற்கு முன் அவனைப் பற்றி ஊரில் கேட்டால் 'பரம யோக்கியன்' என்று சொல்வார்கள். அப்பேர்ப்பட்ட புகழ் வாய்ந்த அவனை அவன் கெட்ட காலம் என்றுதான் சொல்ல வேண்டும், ஜானகி அடிமை கொண்டு விட்டாள்!

ஜானகி தேவியிடம் எப்படியாவது பேசித் தீர்த்துவிட வேண்டுமென்று அவனுக்கு ஒரே ஒரு ஆசை உண்டு. அவளுக்கு ஒரு தம்பியுமிருந்தான். ஆகையால் அவன் ஆசை ஒரு மாதிரியாக நிறைவேறி விடும் என்று நினைத்தான். அவன் முதல் நாள் ஜானகியைப் பார்த்தவுடனேயே அவன் இருதயம் கலங்கி விட்டது!

ஜானகிக்கு வயது பதினாறு அல்லது பதினேழுதானிருக்கும். தலை மயிர் ஒன்றிரண்டு இலேசாக நெற்றிக்கு மேலாகக் காற்றில் பறக்கும்; கையில் வளையல்கள் விளையாடும்; காதில் டோலக் தொங்கும்; அவள் சிரிக்கும்போது முத்துப்போல் பல் வரிசை தோற்ற மளிக்கும்; அவள் உதடுகளில் நிமிஷத்திற் கொருதரம் புன்னகை அரும்பும்.

காலையில் பத்து மணியானவுடன் அழகப்பன் முன் வராந்தாவிற்குப் போவான். ஜானகியும் ஸ்நானம் செய்துவிட்டுத் தலையை உலர்த்திவிட்டுக் கொண்டே கண்ணாடி சீப்புடன் அவனுக்கு முன் பிரசன்னமாவாள். அவனும் நெற்றியில் தூய வெள்ளைத் திருநீறு பூசிக்கொண்டு பூஜைக்கு உட்கார்ந்திருப்பானே தவிர, கவனம் வேறோர் இடத்தில்தான் இருக்கும். கொஞ்ச நேரம் அழகப்பன் முணுமுணுத்து விட்டு மணியை அடிப்பான். அவன் என்ன முணுமுணுக்கிறான் என்பது யாருக்குத் தெரியும்? ஜானகி இந்தக் காட்சிகளையெல்லாம் ஜன்னல் வழியாகக் கடைக்கண்ணால் பார்ப்பாள். அவள் முகத்தில் குறும்புப் புன்னகை தாண்டவமாடும்.

அவன் அம்மாவும் தம்பியும் ஊரில் இல்லை. இல்லாவிட்டால் 'இந்த பூஜை' செய்ய அவனை அனுமதிப்பார்களா? ஆகவே அவனும் அம்மாவுக்கு அடிக்கடி கடிதங்கள் போட்டுக் கொண்டிருந்தான். "சின்ன மாமா வீட்டில் ஒரு மாதம் இருந்தாகி விட்டது. பெரிய மாமாவைப் பார்க்காமல் இங்கே வந்து விட்டால் அவர் கோபித்துக் கொள்ளப் போகிறார். அங்கே பதினைந்து நாளாவது இருந்து விட்டு வரவும்" என்று அம்மாவுக்குக் கடிதம் எழுதினான். எப்படியாவது அம்மா கொஞ்ச நாளைக்கு ஊருக்குத் திரும்பக் கூடாது என்பதுதான் அவன் எண்ணம்.

சாயங்காலத்தில் கேட்க வேண்டுமா! அவன் 'டென்னிஸ் கிளப்'புக்குப் போவதையும் நிறுத்திவிட்டான். சாய்வு நாற்காலியைப் போட்டுச் சாய்ந்துகொண்டு கம்ப ராமாயணத்தையும் கையில் எடுத்துக் கொள்வான். ஆனால் சதா ஒரு சில பாட்டுக்களைத்தான் படித்துக் கொண்டிருப்பான். எந்தப் பாட்டு என்று நினைக்கிறீர்கள்? வேறு ஒன்றுமில்லை! ராமன் மிதிலைக்கு வந்தவுடன் சீதையை மாடத்தில் பார்த்தானல்லவா! உடனே



இன்பக் கனவுகள் கண்டு ஆனந்தமடைவான்......



"நாம் தேவலோகத்திற்குப் போய்ப் பார்த்திருக்கோமா என்ன, அங்கே பசிக்காது என்று சொல்வதற்கு? இவன் சொன்னதை நம்பவேண்டியதுதான்" என்றார் ராஜா.

"கீழே மரத்தடியில் நான் சோறு வைத்திருப்பது ஞாபகம் வந்தது. எவனாவது அதை அடித்துக் கொண்டுபோய் விட்டால் என்ன செய்கிறது என்று கீழே இறங்கிவிடப் பார்த்தேன். நான் ஏறிவந்த மரத்தைக் காணவில்லை. எப்படி இறங்குகிறது என்று யோசித்தேன். அந்தச் சமயத்தில் பூலோகத்தில் யாரோ நெல் குத்திப் புடைத்துக் கொண்டிருந்தார்கள். அந்த உமி தேவலோகம் வரையில் பறந்து வந்தது."

"பொய், பொய்!" என்றார்கள் மந்திரிகள்.

"நான் அந்த உமியைச் சேர்த்து ஒரு கயிறாகத் திரித்து அதைக் கொண்டு கீழே இறங்கினேன்!"

"ஐயோ! ஐயோ! இப்படி ஒருவன் பொய் சொல்லுகிறானே, எங்கேயாவது உமியைக் கயிறாகத் திரிக்க முடியுமா?" என்று கூறினார்கள் மந்திரிகள்.

"இந்தப் போக்கிரி இதுவும் செய்வான், இன்னமும் செய்வான்! கதையைச் சொல்!" என்றார் ராஜா.

"நான் பாதி தூரம் இறங்கி வந்தபோது கயிறு போதவில்லை. என்ன செய்யலாமென்று யோசித்தேன். பிறகு மேலே இருந்த கயிற்றை அறுத்துக் கீழே முடிந்துகொண்டு இறங்கிவந்தேன்!"

"அட கடவுளே! இந்த மாதிரி ஒருவன் செய்ய முடியுமா, மகாராஜா?"

"இந்த அயோக்கியன் இதுவும் செய்வான் இன்னமும் செய்வான். மேலே..." என்றார் ராஜா.

"பூமிக்குச் சற்று தூரத்தில் நான் வந்ததும், கயிறு அறுந்துவிட்டது. 'தொப்' பென்று கீழே விழுந்தேன். கழுத்து வரை சேற்றில் மாட்டிக்கொண்டேன். எப்படி வெளியே வருவதென்று தெரியவில்லை. கடைசியில், அருகிலுள்ள குடிசைக்குப் போய் அங்கே மண்வெட்டியை இரவல் வாங்கிக் கொண்டு வந்து, என்னைச் சுற்றி வெட்டிக் கொண்டே வெளியேறினேன்."

"கஜப் புளுகாயிருக்கிறதே! குடிசைக்குப் போக இவனால் முடியும் போது, மறுபடியும் மண்வெட்டியைக் கொண்டு எதற்காக வெட்டுகிறான்?"

"இவன் பலே கைகாரன்! இவன் விஷயத்தில் எல்லாம் நடக்கும். அப்புறம்!"

"அப்புறம் நான் குளித்துவிட்டுச் சந்தைப் பக்கமாக வரும்போது ஜனங்கள் ஒரு சமாசாரம் பேசிக்கொண்டிருந்தார்கள்" என்றான் குடியானவன் அலுப்புடன்.

"என்ன?" என்று ராஜா, மந்திரி எல்லாரும் கேட்டார்கள்.

"'நம்ம ராஜா மகா உத்தமர், இந்த வருஷத்தில் வரி வசூலிக்கவே வேண்டாம் என்று உத்தரவு போட்டு விட்டார்' என்று பேசிக் கொண்டிருந்தார்கள்!"

"பொய், பொய்! சுத்தப் பொய்! நீதான் ஜயித்து விட்டாய்!" என்று சொல்லிப் பரிசைத் தூக்கிக் குடியானவனிடம் கொடுத்தார் ராஜா.

—ஒரு ருஷ்யக் கதை.

---

★

## "நேரமில்லை"

"ஏண்டா, எங்கேயாவது வேலை செய்து பிழைக்கிறதுதானே......?"

"சாமி, காலையிலிருந்து ராத்திரி வரையில் உங்களைப் போன்ற எஜமான்களிடம் மல்லுக் கொடுப்பதற்குத்தான் நேரம் சரியாய் விடுகிறதே! வேலை செய்ய நாழி ஏதுங்க......?"

★





# கப்பல் மார்க்கு

## தேயிலையும், காப்பியும்

குணத்திலும் மணத்திலும் சிறந்தது. எல்லா இடங்களிலும் கிடைக்கும்.

●

## *Indian Tea & Coffee Co.,*

*52, BUNDER STREET :: G. T. MADRAS.* GPS.

---

நாடெங்கும்
அழகிற் சிறந்த மாதர்கள்
உவந்து உபயோகிப்பது





## மைசூர் சந்தன சோப்

அது அவர்களது அழகை நன்கு பாதுகாக்கிறது. இந்த சோப் ஒன்றுதான் தங்களது அழகை பாதுகாக்கவல்லது என்பதை அவர்கள் நன்கு அறிவார்கள்

# மைசூர் சந்தன சோப்

---

வைத்தியர்களும் விரும்பும் 3 இணையற்ற குடும்ப சஞ்சீவிகள்

ஸ்ரீகர கஸ்தூரி ஸ்ரீகர கோரோஜன பாலக்ஸ் — மூன்றும் ரூ. 1-8-0 6 செட் செலவின்றி

நஞ்சன்கூடு பல்பொடி I.D.L.61, மெடிகேடட் — 3 மாத அளவு ரூ. 0-10-0 போலிகளை மறக்க

க்ரே-கான் இள நரை வழுக்கைத் தடுக்கப்பட்டு கூந்தல் செழுப்புடைய Gray-gon — ரூ. 1-0-0 ரூ. 3-12-0

யுனைடெட் கன்ஸர்ன், பந்தர் தெரு மதராஸ் (உதவி வைத்தியர் Dr. P. S. C. மணி)
(கோவை: 234, ராஜா வீதி) (திருச்சி: சைனா பஜார்) (மதுரை: 42, தெற்காவணி)

# அரசனின் பரிசு

வி.எஸ்.ஆர்

ஒரே ஒரு ஊரில் ஒரு ராஜா இருந்தார். அவருக்குத் தம் பிரஜைகளைப் பொய் சொல்லச் சொல்லிக் கேட்பதில் ரொம்பவும் பிரியம். இதற்காகவே அவர் ஒரு பரிசு ஏற்படுத்தினர். யார் வேண்டுமானாலும் ஆனந்தமாய் ராஜாவிடம் வந்து பொய் சொல்லலாம். "நீ சொல்கிறது பொய்" என்று ராஜாவைச் சொல்ல வைத்து விட்டால் போதும், அவனுக்கு ஒரு தட்டு நிறையத் தங்க மோகராக்கள் கொடுக்கப்படும்.

ஒருநாள், ராஜாவிடம் பொய் சொல்லிப் பணத்தைத் தட்டிக்கொண்டு போவதற்காக ஒரு குடியானவன் வந்தான். அந்தச் சமயத்தில் மந்திரிகளுடன் சீட்டாடிக் கொண்டிருந்த ராஜா ஆட்டத்தை நிறுத்திவிட்டுப் பொய்யைக் கேட்பதற்குத் தயாரானர். குடியானவன் கதையை ஆரம்பித்தான்.

"நான் நேற்று வயலில் உழுதுகொண்டிருந்தேன். சாப்பாட்டு வேளை வரவே, மாட்டை அவிழ்த்து மரத்தில் கட்டிவிட்டுச் சாப்பிடலாமென்று நினைத்தேன். மாட்டை நான் ஏர் முனையிலிருந்து அவிழ்த்ததும் அது திடீரென்று கீழே விழுந்தது. அதற்குப் பிறகு நடந்த அதிசயத்தைக் கேளுங்கள்! முன்பாகம் வேறு, பின்பாகம் வேருகப் பிரிந்தது. பின் பாகம் கீழே விழுந்துவிட, முன் பாகம் மட்டும் வீட்டை நோக்கி ஓட ஆரம்பித்தது."

"இவன் பொய் சொல்லுகிருன். மாடு இரண்டாகப் போகவாவது, முன் பக்கம் மட்டும் வீட்டுக்கு ஓடவாவது!" என்ருர்கள் மந்திரிகள்.

"இல்லை, இந்தப் போக்கிரியின் மாடு என்ன வேண்டுமானாலும் செய்யும். கதையை மேலே சொல்லு!" என்ருர் ராஜா.

"வீட்டுக்குப் போன மாட்டின் முன் பக்கத்தை நான் திரும்ப வயலுக்கு ஓட்டிக் கொண்டுவந்து, பின் பக்கத்துடன் சேர்த்து ஒரு மரத்துடன் கயிற்றினல் கட்டினேன். நான் சோற்று மூட்டையை அவிழ்த்துக் கொண்டிருக்கும்போது திரும்பிப் பார்த்தேன். மாடு கட்டியிருந்த மரம் ஆகாயத்தைத் தொடும் அளவுக்கு வளர்ந்து விட்டது."

"இது மகா அண்டப் புளுகு! அதற்குள் மரம் அவ்வளவு உயரமாக எப்படி வளர முடியும்?" என்ருர்கள் மந்திரிகள்.

"இந்தப் போக்கிரியை உத்தேசித்து அந்த மரம் இவ்வளவும் வளரும், இன்னமும் வளரும். மேலே சொல் கதையை!" என்ருர் ராஜா.

"எனக்கு ரொம்ப நாளாக தேவலோகத்தைப் பார்க்க வேண்டும் என்று ஆசையாயிருந்தது. ஆகையால் அந்த மரத்தின் வழியாக தேவ லோகம் போகலாமென்று ஏறினேன். நான் நெடு நேரம் ஏறிக்கொண்டு போய்க் கடைசியில் தேவலோகம் போய்ச் சேர்ந்தேன்.

"அங்கே என்ன நடந்தது?" என்ருர்கள் மந்திரிகள்.



"பகவான் மற்ற தேவர்களுடன் சீட்டாடிக் கொண்டிருந்தார்."

"பொய், பொய்! பகவாவது சீட்டாடவாவது?" என்ருர்கள் மந்திரி.

"ஏன் ஆடக்கூடாது? நான் இப்பொழுது உங்களுடன் சீட்டாடவில்லையா? இதுமாதிரி அவரும் ஆடிக்கொண்டிருந்திருப்பார். அவருக்கும் பொழுது போக வேண்டுமோ இல்லையோ?" என்ருர் ராஜா.

"நான் தேவலோகத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தபோது எனக்கு ரொம்பப் பசிக்க ஆரம்பித்தது!"

"இதுவும் அபத்தம்! தேவலோகத்தில் ஒருவருக்குமே பசிக்காது! இவன் பொய் சொல்கிருன்?" என்று கத்தினர்கள் மந்திரிகள்.

தொஞ்சம் உதவி செய்தால் உபகாரமாயிருக்கும் என்றும் சொன்னார். சரி என்று ஒப்புக்கொண்டு வீடு திரும்பினார் உக்கிரப்பா.

உள்ளே கூடத்தில் இவருக்கென்று படுக்கை போடப்பட்டிருந்தது. பக்கத்தில் தன் படுக்கையை விரித்துக் கொண்டு இவர் மனைவி இவருக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். ரேழியில் இவர் தாயார் படுத்திருந்தாள்.

மகனைக் கண்டதும் தாயார் எழுந்து, "ரொம்ப நாளாக நான் உன்னை ஒன்று கேட்க வேண்டுமென்று இருந்தேன். உன் பையனுக்கும் வயதாகிக் கொண்டிருக்கிறது. தன் அண்ணா பெண்ணைத்தான் கலியாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று உன் மனைவி பிடிவாதம் பிடிக்கிறாள். அந்தப் பெண்ணைக் கண்டால் எனக்குக் கொஞ்சங் கூடப் பிடிக்கவில்லை. உன் தங்கை பெண் இராஜாத்தியாட்டம் இருக்கிறாளே! உன் பிள்ளைக்கு அவளைக் கலியாணம் செய்து கொடுத்தால்தான் நான் நிம்மதியாகச் சாவேன்" என்றாள்.

"வருஷப் பிறப்பும் அதுவுமாக எதற்கு இப்படிப் பேசுகிறீர்கள்? இந்த வீட்டில் நீங்கள் சொல்கிறபடிதான் நடக்கிறதே ஒழிய, நான் சொல்லுகிறபடி என்ன நடக்கிறது? நீங்கள் இஷ்டப்பட்ட பெண்ணைத் தான் பண்ணிக் கொள்ளுங்களேன்!" என்று சற்றுக் கடுமையாகச் சொன்னாள் உக்கிரப்பாவின் மனைவி.

"அவன்தான் சரி என்று சொல்லிவிட்டானே? உனக்குச் சம்மதந் தானே" என்று கேட்டாள் தாயார்.

உக்கிரப்பா 'சரி' என்று தலையாட்டியதும் அவர் தாயார் சந்தோஷமாகப் படுக்கச் சென்றாள்.

அவள் அப்பால் சென்றதும், உக்கிரப்பாவின் பக்கத்தில் அவர் மனைவி வந்து உட்கார்ந்து கொண்டு வெற்றிலை மடித்துக் கொடுத்தாள். வெற்றிலையை மென்று கொண்டே உக்கிரப்பா, "பெரிய யமகாதகியாயிருக்கிறாயே! உன் அண்ணா பெண்ணை மருமகளாகக் கொள்ள உனக்கே சம்மதமில்லை. அந்தப் பழியை வெகு சாமர்த்தியமாக என் தாயார் மீது சுமத்தி விட்டாயே; என்ன இருந்தாலும் நீ பலே கெட்டிக்காரிதான்!" என்று சொல்லி விட்டு ஆசையாக அவள் கன்னத்தில் ஒரு தட்டுத் தட்டினார்.

# மயக்க மருந்து

பகீரதன்

தானும் அனுபவிக்காமல் பிறரையும் அனுபவிக்க விடாமல் பணங்காத்த பூதமாக வாழ்ந்து வருபவர்களில் ராமச்சந்திர ராவும் ஒருவர்.

என்ன காரணத்தினாலோ அவருக்குத் திடீரென்று வயிற்றில் வலி உண்டாகிவிட்டது. ராவ் துடியாய்த் துடித்தார். பணம் செலவழியாமல் அவர் மனைவி பாகீரதியம்மாள் என்னென்னவோ வைத்தியம் செய்து பார்த்தாள். குணமாகவில்லை! கடைசியில் ஒருவாறு மனசைத் திடப்படுத்திக்கொண்டு டாக்டரை அழைத்துவரச் சொன்னாள்.

டாக்டர் வந்ததும் ராமச்சந்திர ராவின் உடம்பைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு மௌனம் சாதித்தார்.

"என்ன, டாக்டர்! பேசாமல் இருக்கிறீர்களே? ஏதாவது மருந்து கொடுங்களேன். இரண்டு மூன்று நாளாக அவர் படும் கஷ்டத்தை என்னால் பார்க்க முடியவில்லை" என்றாள் பாகீரதி.

"சாதாரணமாயிருந்தால் ஏதாவது மருந்து கொடுத்து விடுவேன். இப்பொழுது கொஞ்சம் கஷ்டம்" என்றார் டாக்டர்.

"என்ன கஷ்டம்" என்று படபடப்புடன் கேட்டாள் பாகீரதி அம்மாள்.

"மருந்தைக் கொடுத்துக் குணப்படுத்தக் கூடிய வியாதியாயில்லை. அதுதான் யோசிக்கிறேன்" என்றார் டாக்டர்.

"பின் என்னதான் செய்ய வேணும்?" என்றாள் பாகீரதி கவலையுடன்.

"மருந்து கொடுப்பதில் ஒன்றும் பிரயோசனமில்லை. 'ஆபரேஷன்' செய்யவேண்டும்" என்றார் டாக்டர்.

"அதற்கென்ன, செய்யுங்களேன்! எப்படியாவது வலி குணமாக வேண்டியது!" என்றாள் பாகீரதி.

"ஆபரேஷன் செய்வதாயிருந்தால் முதலில் இவருக்கு மயக்க மருந்து கொடுக்க வேண்டும்" என்றார் டாக்டர்.

"அதைத்தான் கொடுங்களேன். யார் வேண்டாமென்கிறது?" என்றாள் பாகீரதி.

"யுத்தகாலமோல்லியோ? 'பில்' அதிகமாகும். அதுதான் யோசிக்கிறேன்" என்றார் டாக்டர் சிறிது தயக்கத்துடன்.

"எவ்வளவு ஆகும்?" என்று மெலிந்த குரலில் கேட்டார் ராவ். "குறைந்தது நூறு ரூபாயாவது ஆகும்" என்றார் டாக்டர்.

அதைக் கேட்டதுதான் தாமதம். ராமச்சந்திர ராவ், "நூறு ரூபாயா!" என்று பயங்கரமாக அலறிவிட்டு, அடுத்த நிமிஷமே பேச்சு மூச்சின்றிப் படுக்கையில் சாய்ந்து விட்டார்.

"என்ன, டாக்டர்! இப்படியாகி விட்டதே!" என்று கதறினாள் பாகீரதி.

"ஒன்றுமில்லை, பயப்படாதீர்கள்! 'பில்' நூறு ரூபாய் என்றதும் திகிலினால் மயக்கமடைந்துவிட்டார்; அவ்வளவுதான்" என்றார் டாக்டர்.

"அப்படியானால் தயவு செய்து இந்த மயக்கம் தெளிவதற்குள்ளேயே 'ஆபரேஷன்' செய்து விடுங்களேன்!" என்றாள் பாகீரதி.

ஜனங்கள் எல்லாம் கூடியிருக்கிறது. நீங்களும் வரவேண்டும்" என்றான். உக்கிரப்பா மறுக்க முடியாமல் சாவடிக்குப் போய்ச் சேர்ந்தார். கிராமமே அங்கு கூடியிருந்தது. ஜனங்கள் ரங்கனுக்கு மாலை போட்டு, அலங்காரம் செய்து, அவனையும் சிறுத்தையையும் ஒரு வண்டியில் வைத்து ஊர்வலமாக அழைத்துச் செல்லத் தயாராயிருந்தனர். உக்கிரப்பா வந்தவுடன் ஊர்வலம் கிளம்பிற்று. ஊர்வலம் அடுத்த கிராமத்துக்குச் செல்வதற்காகத் திரும்பியதும் உக்கிரப்பா வீடு திரும்பினார்.

பாவம், உக்கிரப்பா மிகவும் களைத்திருந்தார். காலையிலிருந்து ஒய்ச்சல் ஒழிவு என்பதில்லை. அவரைக் கண்டதும் அவர் தாயார், "வருஷப் பிறப்பும் அதுவுமாக வீட்டில் தங்கக் கூடாதா? வெய்யிலில் நீயே போக வேணுமா? உனக்குப் பதில் உன் பிள்ளையைப் போகச் சொல்லக் கூடாதா?" என்றாள்.

அதற்கு உக்கிரப்பா "என் பிள்ளையை வெய்யிலில் அனுப்பினால் அவன் அம்மா சண்டைக்கு வரமாட்டாளா?" என்று கேட்டார்.

இப்படிச் சொல்லி விட்டு சற்றுத் தூங்கலாம் என்று உக்கிரப்பா கீழே படுத்தார். படுத்தது தான் தாமதம், குருக்கள் சாம பட்டர் அங்கு வந்து சேர்ந்தார். அன்று இரவு பஞ்சாங்கம் வாசிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பற்றி வெகு நேரம் பேசிக் கொண்டிருந்த பிறகு வீடு திரும்பினார்.

அவர் தலை மறைந்திருக்காது. அதற்குள் கிராமத்து அர்ச்சகர் வந்து சேர்ந்தார். அன்றைய அர்ச்சனைச் செலவு மணியக்கார உக்கிரப்பாவைச் சேர்ந்தது. ஆகவே அதற்கு வேண்டிய சாமான்களை அர்ச்சகரிடம் கொடுத்து அனுப்பினார்.

இதற்குள் பொழுது அஸ்தமிக்கும் சமயமாகி விட்டது. சற்றுக்கண்ணயரலாமென்று உக்கிரப்பா திரும்பவும் படுக்கப் போனார். "நல்ல நாளும் அதுவுமாக, சாயந்திர வேளையில் தூங்கலாமா?" என்று அவர் தாயார் சொன்னாள். படுக்காமல் சாவடிக்குச் சென்று சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

## 5

ஊர்வலம் சென்றவர்களெல்லாம் திரும்பி வராததால் அன்று கோயிலில் பூஜை ஆரம்பிப்பதற்கு வெகு நாழிகை ஆகிவிட்டது.

பூஜை முடிந்ததும் எல்லாரும் அவரவர்கள் வீட்டுக்குச் சென்று சாப்பாட்டை முடித்துக் கொண்டு பஞ்சாங்கம் கேட்பதற்காகச் சாவடிக்கு வந்து சேர்ந்தனர்.

குருக்கள் பஞ்சாங்கம் படித்து முடிப்பதற்குள் கூட்டத்தில் வந்திருந்த குழந்தைகள் தூங்க ஆரம்பித்துவிட்டன. பெரியவர்களும் கொட்டாவி விட ஆரம்பித்து விட்டார்கள். ஒருவழியாகப் பஞ்சாங்கம் படித்து முடிந்ததும் உக்கிரப்பா வீடு நோக்கிப் புறப்பட்டார். குருக்கள் அவரைப் பின் தொடர்ந்தார்.

"என்ன வேண்டும்" என்று உக்கிரப்பா கேட்டதற்குத் தன் பிள்ளைக்குப் பத்து வயதாகியும் இன்னும் பூணூல் போடவில்லையென்றும், அதற்கு அவர் ஏதாவது

## பள்ளிக் கணக்கு



"அப்பா! குமாஸ்தாக்கு நாளைப் படி அதிகமாம்!"



"எங்கேடா? எங்கே?"




"தம்பியுடைய கணக்குப் புஸ்தகத்திலே, அப்பா!"

நான்கு கட்டி வெல்லத்தை அவன்தான் கொடுக்கவேண்டும் என்றும் தீர்ப்புச் சொன்னார். ஆனால், உக்கிரப்பா இதற்கு இணங்கவில்லை.

"வெல்லத்தை அமில்தாரா சாப்பிடப் போகிறார்? பிராமணர்களுக்குத்தான் தானம் செய்யப் போகிறார். வலுவில் என்னைத் தேடிவரும் புண்ணியத்தை நான் விடமாட்டேன்" என்று சொன்னார்.

ஆகவே, ஒன்பது நாள் கழித்து வரப் போகும் ஸ்ரீராம நவமி உற்சவத்துக்கு வேண்டிய வெல்லத்தைச் சின்னப்பாவே கொடுக்க வேண்டும் என்று ஏற்பாடாயிற்று.

இதற்குள் பன்னிரண்டு கட்டி வெல்லம் சாவடிக்கு வந்து சேர்ந்தது. உக்கிரப்பா அவற்றை இரண்டு ஆள் தலையில் வைத்து வில்லைச் சேவகனுடன் அனுப்பினார்.

சேவகன் அப்பால் சென்றதும், "இதில் எவ்வளவுதான் அமில்தாருக்குப் போய்ச் சேரப் போகிறதோ சொல்ல முடியாது" என்றார் சாஸ்திரி.

"அதற்கு என்ன பண்ணலாம்? தேன் எடுத்தவன் புறங்கையை நக்காமல் இருப்பானா? வில்லைச் சேவகன், ஷேக்தார் இவர்களெல்லாம் எடுத்துக் கொண்டது போக மீதிதான் அமில்தாரைப் போய்ச் சேரும்" என்றார் குருக்கள்.

"எப்படியிருந்தபோதிலும்,வெல்லம் வந்து சேர்ந்ததா என்று அமில்தாரை உக்கிரப்பா கேட்டு விடுவார்" என்றார் கணக்குப் பிள்ளை.

இதைக் கேட்டு உக்கிரப்பா நகைத்தார். இந்தச் சமயம் அவர் குழந்தைகள் வந்து "குளிப்பதற்கு வெந்நீர் தயாராயிருக்கிறது. அம்மா அழைத்து வரச் சொன்னாள்" என்று சொன்னார்கள்.

"இதோ வருகிறேன் என்று சொல்லு" என்று குழந்தைகளை அனுப்பிவிட்டு, கிராமத்து வரிவசூல் விஷயத்தைக் கவனிக்க ஆரம்பித்தார் உக்கிரப்பா. யார் யார் வரி பாக்கி வைத்திருந்தார்களோ, அவர்களை எல்லாம் அழைத்து வரும்படி முனியனை அனுப்பினார். எட்டுப் பேர் வந்தார்கள். வரி பாக்கி வைத்திருந்தால் தாலுக்கா ஆபீஸிலிருந்து நோட்டீஸ் வரும் என்றும், அது தங்கள் கிராமத்துக்கே அவமானம் என்றும் நயமாக எடுத்துச் சொன்னான்.

சீக்கிரமே வரியைச் செலுத்துவதாக அவர்கள் வாக்களித்ததும் உக்கிரப்பா எழுந்து வீட்டுக்குச் சென்றார். புருஷன் வந்ததும் வராததுமாக அவர் மனைவி அவரைப் 'பொலு, பொலு' என்று பிடித்துக் கொண்டாள்.

## 4

"உங்களுக்கு நாளா கிழமையா ஒன்றும் கிடையாது. வருஷப் பிறப்பும் அதுவுமாக, எப்பொழுது குளித்துவிட்டுச் சாப்பிடுகிறது? குழந்தைகளெல்லாம் பட்டினியாயிருக்கிறது" என்றாள்.

"நான் என்ன பண்ணுவேன்? காலையிலிருந்து ஏதாவது ஒன்று மாற்றி ஒன்று வந்து கொண்டேயிருக்கிறது. சாவடி வேலையை முடித்துக் கொண்டு தானே வரவேண்டும்?"

"ஆமாம், சின்னப்பா உங்களை வாயில் வந்தபடி வைதானும். இதை எல்லாம் கேட்டுக்கொண்டு சும்மா இருந்தீர்களாமே, நிஜந்தானா?"

"ஆமாம். வைதான். அதற்காக வருகிற ஸ்ரீராம நவமி பானகச் செலவை அவன் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று ஏற்பாடாகி யிருக்கிறது."

"வெகு அழகாயிருக்கிறதே! பானகச் செலவை ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கும் யாரும் தங்களை இஷ்டம்போல் வையலாம் போலிருக்கே?"

"நீ என்ன, நான் குளிப்பதற்கு எண்ணெய், சிண்ணெய் எடுத்து வைக்கப் போகிறாயா? அல்லது இப்படி வார்த்தைகளாலேயே அபிஷேகம் செய்துகொண்டிருக்கப் போகிறாயா?" என்று உக்கிரப்பா சற்றுக் கடுமையாகக் கேட்டார்.

உக்கிரப்பாவின் மனைவி ஏதோ முணுமுணுத்துக் கொண்டே குளிப்பதற்கு வேண்டிய சாமான்களை எடுத்து வைத்தாள்.

ஸ்நானம், பூஜை இரண்டும் முடிந்தானதும், உக்கிரப்பா குழந்தைகளுடன் சேர்ந்து சாப்பிட்டார். சாப்பாடு முடிந்து கால்மணியாகி யிருக்காது, கிராமத்துக் காவற்காரன் வந்து சேர்ந்தான்.

"எங்கே வந்தே" என்று காவற்காரனைக் கேட்டார் உக்கிரப்பா.

"மந்தை வெளியில் மேய்ந்து கொண்டிருந்த மாடுகளை ஒரு சிறுத்தை வந்து தாக்கிவிட்டது. அதை மாட்டுக்கார ரங்கன் கொன்றுவிட்டான். இறந்து போன அந்த சிறுத்தையைச் சாவடியில் கொண்டு வந்து போட்டிருக்கிறார்கள். அதைப் பார்க்க

ராமப்பாவும் சின்னப்பாவும் தங்கள் வழக்கையெடுத்துச் சொன்னார்கள். உக்கிரப்பா அவர்களைச் சற்றுப் பொறுத்திருக்கச் சொல்லிவிட்டு, அமில்தார் கேட்டனுப்பிய வெல்ல விஷயத்தை முதலில் எடுத்துக் கொண்டார்.

அமில்தாருக்குப் பத்துக்கட்டியும் ஷேக்தாருக்கு இரண்டு கட்டியும்' ஆகப் பன்னிரண்டு கட்டி வெல்லம் தேவையென்றும் அதைத்தான் சொல்லியனுப்பிய நான்கு பேரும் ஆளுக்கு மூன்றாகக் கொடுக்க வேண்டுமென்றும் சொன்னார். இதைக் கேட்டதும் அந்த நான்கு பேரும் முணுமுணுத்தனர். கடைசியில் ஆளுக்கு இரண்டு கட்டிகள் கொடுக்கும்படியும் மீதி நான்கைத் தான் கொடுப்பதாயும் உக்கிரப்பா ஒப்புக் கொண்டார்.

"நீ இவ்வளவு தாராள மனதுடன் இருப்பதால்தான் உன் தலையை எல்லாரும் மேலும் மேலும் தடவுகிறார்கள்" என்றார் ராம சாஸ்திரி.

இதற்குக் குருக்கள் பதில் சொன்னார்: "நம் மணியம் எல்லாரிடமும் நல்ல தனமாக நடந்துகொள்வதால்தான் அமில்தார் அவன் மீது பட்சமாயிருக்கிறார். அமில்தாரின் பார்வையில் முந்நூறு கிராமங்கள் இருக்கின்றனவே, வேறு எந்தக் கிராமத்திலாவது கிணறு வெட்டிக் கொடுத்தாரா? நம் கிராமத்தில் மட்டுந்தானே அவர் கிணறு வெட்டிக் கொடுத்தார்?"

"தம் சொந்தப் பணத்தைக் கொண்டு வெட்டினாரோ? எல்லாம் சர்க்கார் பணந்தானே?" என்று கேட்டார் சாஸ்திரி.

"சர்க்கார் பணம் தானாகவே கிணறு வெட்டுமா? மழையைத் தன்னுள் அடக்கிக் கொண்டு மேகம் மேலே கிளம்புகிறது. ஆனால் காற்று அதை எங்கே தள்ளிக் கொண்டு போகிறதோ அங்கே தானே மழை பெய்யும்?" என்று அழகாக எடுத்துச் சொன்னார் உக்கிரப்பா.

பிறகு உக்கிரப்பா சின்னப்பாவைப் பார்த்து "சாவடியில் எல்லாருமாகச் சேர்ந்து ஒப்புக்கொண்ட ஒரு தீர்மானத்தை நீ மீறுவதாயிருந்தால் கிராமக் காரியங்கள் எப்படி ஒழுங்காக நடைபெறும்?" என்று கேட்டார்.

அதற்கு, சின்னப்பா தான் மடையைத் திறந்து விடவில்லையென்றும், முனியன் ஒரு வேளை மடையை மூட மறந்திருக்கலாம், இல்லாவிட்டால் மடை தானாகவே உடைந்து போயிருக்கலாம், அல்லது தன் வேலைக்காரன் தெரியாத்தனமாக மடையைத் திறந்து விட்டிருக்கலாம் என்று இம்மாதிரி ஏதேதோ சாக்குகள் சொன்னான்.

இந்தச் சாக்குகளை ஒப்புக்கொள்ள உக்கிரப்பா மறுக்கவே, சின்னப்பா கோபத்தில் கன்னாபின்னாவென்று கத்த ஆரம்பித்து விட்டான்.

"ராமப்பா உனக்குச் சொந்தம். அதனால்தான் நீ பாரபக்ஷம் காட்டுகிறாய்! மணியம் என்று பெயர் வைத்துக் கொண்டிருந்தால் மட்டும் போதுமா? வேலையை ஒழுங்காக நடத்த யோக்கியதை வேண்டாமா?" என்றான் சின்னப்பா.

"என் திறமையில் உனக்கு அவ்வளவு சந்தேகம் இருந்தால் இந்த வேலையை வேண்டுமானால் நீயே பாரேன்" என்று உக்கிரப்பா சாந்தமாகப் பதில் சொன்னார்.

இந்தச் சமயம் கிராமக் கணக்குப் பிள்ளை அங்கே வந்து சேர்ந்தார். உக்கிரப்பாவுக்கும், சின்னப்பாவுக்கும் நடந்த வாக்கு வாதத்தைக் கேட்டார். தான் மணியக்காரரை அவதூறாகப் பேசியது தப்பிதம் என்று சின்னப்பாவையே ஒப்புக்கொள்ளும்படி செய்தார். அதற்காக, உக்கிரப்பா அமில்தாருக்கு அனுப்புவதற்காகக் கொடுக்க ஒப்புக்கொண்ட



கடைசியில் சாஸ்திரி, "என் பெண்ணை அவள் புருஷன் வீட்டிற்கு அனுப்பவேண்டி யிருக்கிறது. அவள் மாமியாருக்கு உடம்பு சௌகரியமில்லையாம். அதனால் உடனே அனுப்பி வைக்கும்படி மருமகன் சொல்லி அனுப்பி யிருக்கிறான். அவளும் போக வேண்டும் என்று துடியாய்த் துடிக்கிறாள்" என்று சொன்னார்.

"ஆமாம் நியாயந் தானே? நீங்கள் அனுப்புவதற்கு என்ன?"

"அனுப்ப வேண்டியதுதான். ஆனால் வண்டி வாடகைக்கு நான் எங்கே போவேன்? நீ ஒரு நாளைக்கு உன் குதிரையைக் கொடுத்து உதவ முடியுமானால் அது எனக்கு எவ்வளவோ உபகாரமா யிருக்கும்."

"பூ! இது என்ன பிரமாதம். நம் கிராமத்துப் பெண் ஒருத்தி தன் புருஷன் வீட்டுக்குச் செல்வதற்கு என் குதிரை வேண்டுமானால், நான் மாட்டேன் என்றா சொல்வேன்? என்றைக்கு வேண்டுமானாலும் தருகிறேன்."

"நீ, மகாராஜனாக இருக்க வேண்டும். நீ மணியமாய் இருக்கும் வரையில் எங்களுக்கு என்ன குறை?" என்று உக்கிரப்பாவை வாழ்த்தி விட்டுத் தம் வேலையைப் பார்க்கச் சென்றார் சாஸ்திரியார்.

உக்கிரப்பா சிறிது நேரம் தோப்பைச் சுற்றிப் பார்த்துவிட்டு, வெகு வேகமாக வீட்டை நோக்கி நடந்தார். அன்று வருஷப்பிறப்பானதால் எண்ணெய் தேய்த்துக் கொள்ளவேண்டும் என்று அவர் மனைவி சொல்லி யிருந்தாள். அந்தப் பாழாய்ப் போன சிறுத்தை மாத்திரம் வந்து எழுப்பியிரா விட்டால் இன்னும் சற்று நாழி கழித்தே எழுந்திருந்திருப்பார். எழுந்தவுடன் முதல் காரியமாக எண்ணெய் தேய்த்துக் கொண்டிருப்பார்.

உக்கிரப்பா கிராமத்திற்குள் கால் எடுத்து வைத்திருக்கமாட்டார், தாலுக்கா ஆபீஸ் வில்லைச் சேவகன் எதிரே வந்தான். "என்ன விசேஷம், எங்கே வந்தாய்?" என்று விசாரித்தார் உக்கிரப்பா.

அதற்கு அவன், "ஷேக்தார் அனுப்பினார். அமில்தாருக்கு அனுப்பு வதற்காகக் கணக்குப்பிள்ளை வீட்டில் வெல்லம் சேர்த்து வைத்திருந்தாராம். கணக்குப் பிள்ளையின் வீட்டில் நடந்த கலியாணத்தின் போது தெரியாமல் அதில் பாதியைச் செலவழித்து விட்டார்களாம். பத்து வெல்லக் கட்டி குறைகிறதாம். அதைத் தங்களிடமிருந்து வாங்கி வரும்படி ஷேக்தார் அனுப்பினார்" என்றான்.

"எங்கள் கிராமம் மிகச் சிறியது. முறைப்படி நாங்கள் கொடுக்க வேண்டிய வெல்லத்திற்கே திண்டாடுகிறோம். இன்னும் பத்துக் கட்டி வெல்லத்துக்கு எங்கே போவேன்?"

"என்னவோ எனக்குத் தெரியாது. உங்கள் பாடு ஷேக்தார் பாடு" என்றான் வில்லைச் சேவகன்.

## 3

உக்கிரப்பா கிராமச்சாவடிக்குச் சென்று கீழே உட்கார்ந்தார். தெருவில் போய்க் கொண்டிருந்த ஒரு ஆளைக் கூப்பிட்டு, யாரையோ நான்கு பேரை அழைத்துக் கொண்டு வரும்படி சொன்னார். வில்லைச் சேவகன் சாவடியின் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டான். சிறிது நேரம் கழித்து, ராமப்பாவும் சின்னப்பாவும் உரத்த குரலில் ஏதோ சண்டை போட்டுக்கொண்டு அங்கே வந்து சேர்ந்தார்கள்.

இதற்குள், ராமசாஸ்திரியும் குருக்கள் சாம பட்டரும் அங்கு வந்து சேர்ந்தனர். உக்கிரப்பா சொல்லியனுப்பிய மனிதர்களும் ஒருவர் பின் ஒருவராக வந்து சேர்ந்தனர்.



# வருஷப் பிறப்பு



மாஸ்தி வேங்கடேசய்யங்கார்

★

தமிழாக்கியவர்: நாடோடி

★

முப்பது வருஷங்களுக்கு முன்பு இருக்கும். அன்று வருஷப் பிறப்பு. தூங்கிக்கொண்டிருந்த மணியக்கார உக்கிரப்பா, பசு கத்துவதைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தார். "ஏ மாரா! அங்கே இருக்கிறாயா? மாடு ஏன் கத்துகிறது? ஏதாவது சிறுத்தை கிறுத்தை இருக்கிறதா பார்?" என்று கத்தினார். ஆனால் இதற்குப் பதில் வரவில்லை. ஆகவே உக்கிரப்பா எழுந்து கதவைத் திறந்து மாட்டுத் தொழுவத்துக்குச் சென்றார். எல்லா மாடுகளும் படுத்திருந்தன. ஒரு கன்றுக் குட்டி மாத்திரம் கயிற்றை அவிழ்த்துக்கொண்டு துள்ளிக் குதித்து விளையாடிக் கொண்டிருந்தது.

"மாரா, மாரா!" என்று உக்கிரப்பா திரும்பவும் கூவினார். மாரனைக் காணோம். இக்கூக்குரலைக் கேட்டு உக்கிரப்பாவின் தம்பி மாட்டுத் தொழுவத்திற்கு ஓடி வந்தான்.

"என்ன அண்ணா, என்ன விசேஷம்?" என்று கேட்டான்.

"மாடு கத்திற்றே, ஏதாவது சிறுத்தைதான் வந்துவிட்டதோ என்று பார்ப்பதற்காக எழுந்து வந்தேன். வருஷப் பிறப்பும் அதுவுமாக மாடுகளைச் சிறுத்தை கொன்றுவிடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்" என்று உக்கிரப்பா சொன்னார்.

அப்பொழுது கிராமத்து வயல்களுக்குத் தண்ணீர் பாய்ச்சும் முனியன் உக்கிரப்பாவைத் தேடி வந்தான்.

அவன் உக்கிரப்பாவைப் பார்த்து, "இந்தச் சின்னப்பாவின் கொட்டம் வர வர சகிக்க முடியவில்லை. இவருக்கு ஒரு நாளும் ராமப்பாவுக்கு ஒரு நாளும் தண்ணீர் விடவேண்டும் என்று நீங்கள் சொன்னீர்களல்லவா? அதன்படியே நேற்று சாயந்திரம் சின்னப்பாவின் வயலுக்குப் பாய்ந்து கொண்டிருந்த தண்ணீரை அடைத்துப் போட்டேன். இன்று காலையில் போய்ப் பார்த்தால் அந்த வயலுக்கே திரும்பவும் தண்ணீர் பாய்ந்து கொண்டு இருக்கிறது. சின்னப்பா தானே மடையைத் திறந்து விட்டு விட்டு, தனக்கு ஒன்றும் தெரியாதது போல் கையை விரிக்கிறார்" என்று முறையிட்டான். இதைக் குறித்துத் தான் விசாரிப்பதாகச் சொல்லிவிட்டு உக்கிரப்பா குளிப்பதற்காகக் குளத்தை நோக்கிச் சென்றார்.

ஸ்நானம் செய்து முடிந்ததும், உக்கிரப்பா அரச மரத்தை வலம் வந்தார். பிறகு, கிழக்கு நோக்கி உட்கார்ந்தார்.

மனோகரமான காற்று 'ஜிலு, ஜிலு' என்று வீசிக் கொண்டிருந்தது. அரச மரத்தின் இலைகள் 'சல, சல' என்று ஓசை செய்து கொண்டிருந்தன. குளத்துக்கு அக்கரையில் உள்ள தோப்பிலிருந்து மாம்பழ வாசனை கம்மென்று வந்து கொண்டிருந்தது. கிழக்கே சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். சூரியனைக் கண்டதும், உக்கிரப்பா எழுந்து நின்று கைகூப்பிப் பிரார்த்தனை செய்தார். பிரார்த்தனை முடிந்ததும், குளக்கரை வழியாக மெதுவாக நடக்க ஆரம்பித்தார். இதுவரை தூரத்தில் நின்று கொண்டிருந்த முனியன் எஜமானனுடன் வந்து சேர்ந்து கொண்டான்.

## 2

குளக்கரை வழியாக நடந்து கொண்டிருக்கையில், ராம சாஸ்திரி எதிரில் வந்தார். இருவரும் கிராம விஷயங்களைப் பற்றிச் சிறிது நேரம் பேசினார்கள்.



சிங்கராணி பெண்ணைப் பார்க்க வேண்டுமென்று துடியாய்த் துடித்துக் கொண்டு இருக்கிருள். இங்கு அழைத்து வருவோமென்று பார்த்தால் தாங்கள் ரொம்ப ஆசைப்பட்டு இப்பொழுதுதான் சிங்காவதிக்கு டியூஷன் ஏற்பாடு செய்திருக்கிறீர்கள். அதைக் கெடுத்து எப்படி இங்கு அழைத்து வருவதென்று பார்க்கிறேன். நீங்களும் அவளை அனுப்பி விட்டு எப்படித் தனியாக இருப்பீர்கள்? மேலும், எனக்கும் வயதாகி விட்டது. இருக்கும் ஒரு குழந்தையையும் விட்டுப் பிரிந்து இருப்பானேன் என்று சிங்கராணி அடிக்கடி சொல்லுகிருள். மந்திரி புலியாரும் எங்களுடன் வருவதாகச் சொல்லி இருக்கிருர். இங்கு எங்களுக்கு நல்ல சாப்பாடே கிடைப்பதில்லை. காயும் கிழங்கும் சாப்பிட்டுச் சாப்பிட்டு அலுத்து விட்டது.

கெட்டும் பட்டணம் சேர் என்பது போல் எல்லோரும் அங்கேயே ஒரு குடும்பமாக இருக்கலாம். பெரிய வீடாகப் பார்த்து வைக்கவும். ஏனென்ருல் சின்ன இடத்தில் இருந்து எங்களுக்குப் பழக்கமில்லை. அடுத்த வாரம் புறப்படலா மென்றிருக்கிறேன்.

பிரியமுள்ள மாமனர்,
மிருகேந்திரன்."

இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் மாப்பிள்ளைச் சிங்கம் கீழே விழுந்து மூர்ச்சை யடைந்தது.

எழுதி விட்டால் போகிறது" என்றது புலி மந்திரி.

புலியார் சொன்னபடி. சிங்கராஜா மாப்பிள்ளைச் சிங்கத்திற்குக் கடிதம் எழுதினுர்.

மாமனுரிடமிருந்து வந்த கடிதத்தைப் பார்த்ததும் மாப்பிள்ளைச் சிங்கத்திற்கு ஒன்றுமே தோன்றவில்லை. "கிணறு வெட்ட பூதம் புறப்பட்டதுபோல் இருக்கிறதே, இரண்டு மாதத்திற்காவது வீட்டுத் தொல்லையில்லாமல் கொஞ்சம் ஹாய்யாக இருக்கலாமென்று பார்த்தால், டியூஷனுக்கும் நம்மையே ஏற்பாடு செய்யும்படி எழுதி யிருக்கிருரே!" என்று அது ஆத்திரப்பட்டது. வரும்படி செலவுக்கே போதவில்லை, டியூஷன் வாத்தியாருக்குக் கொடுக்க வேண்டிய சம்பளத்தையாவது அனுப்பும்படி எழுதுவோம் என்று மாமனுருக்குக் கடிதம் எழுதிற்று.

அதற்குப் பின் வருமாறு பதில் வந்தது :

"சிரஞ்சீவி மாப்பிள்ளைச் சிங்கத்திற்கு அநேக ஆசீர்வாதம். க்ஷேமம் க்ஷேமோபரி. டியூஷன் வாத்தியார் கிடைத்தது பற்றி மிகவும் சந்தோஷம். என் மகள் சிங்காவதி, நல்ல புத்திசாலி. சுறு சுறுப்பாய்ப் படிப்பவள் என்றும் எனக்குத் தெரியும். டியூஷன் வாத்தியார் சொல்லிக் கொடுப்பதை அக்கரையுடன் படித்துக் கொண்டு வருவாள் என்று நம்புகிறேன்.





# கடிதமும் பதிலும்

செல்லம்

அன்று தபால்காரன் கடிதம் கொண்டு வந்து கொடுத்ததும், காட்டில் சிங்க ராஜா, சிங்க ராணி இரண்டு பேரும் சந்தோஷத்தினுல் துள்ளிக் குதித்தார்கள். கவரின் மேல் இருந்த கையெழுத்தைக் கொண்டு அது மாப்பிள்ளை எழுதிய கடிதம் என்று அவர்கள் தெரிந்து கொண்டதுதான் இதற்குக் காரணம்.

ஆனுல் கவரை உடைத்து, கடிதத்தைப் பிரித்துப் பார்த்ததும் சிங்க ராஜாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது!

"மாப்பிள்ளை என்ன ஏழுதி யிருக்கிருர்? வாசியுங்களேன்! பெண் சௌக்கியமாய் இருக்கிருளாமா?" என்று சிங்க ராணி கவலையுடன் கேட்டாள். சிங்க ராஜா கடிதத்தை வாசித்தார்.

"உங்கள் பெண்ணுக்குப் படிக்கவே தெரியவில்லை. வீட்டில் கணக்கு வழக்குப் பார்க்கத் தெரியாமல் கண்டபடி செலவு செய்கிருள். நாவல் படிக்கக்கூட அவளுக்குத் தெரியவில்லை. ஆகையால் இந்தக் கடிதம் கண்டவுடன் வந்து பெண்ணை அழைத்துப் போய் டியூஷன் சொல்லிக் கொடுக்க வேண்டும்" என்று எழுதியிருந்தது.



"மாப்பிள்ளை இப்படி எழுதி யிருக்கிருனே! என்ன பண்ணுவது என்று தெரிய வில்லையே!" என்று சொன்னுர் சிங்க ராஜா.

பிறகு, அவர் தம் மந்திரியான புலியாரைக் கூப்பிட்டனுப்பி ரகசியமாக யோசனை செய்தார்.

"என்ன அதிசயம்? இந்த மாப்பிள்ளைக்குப் பெண் படிக்கவில்லை என்று தெரியாதா? இப்பொழுது திடீர் என்று எப்படி டியூஷன் வாத்தியார் ஏற்படுத்துகிறது? இங்கு பணத்தில் புரண்ட கை, அங்கு செட்டாக இருக்கத் தெரியவில்லைபோல் இருக்கிறது. இந்த சர்க்கஸ்காரச் சிங்கத்திற்குப் பெண்ணைக் கொடுக்க வேண்டாமென்று சொன்னேன். அவள் கேட்கவே இல்லை. இப்போது என்ன செய்கிறது? இந்தக் காடோ பட்டிக்காடு. இங்கு டியூஷன் வாத்தியார் கிடைப்பதே அருமை. இங்கு ஒரு திண்ணைப் பள்ளிக்கூடம் தானே இருக்கிறது?" என்றுர் சிங்க ராஜா.

"என்ன, மகாராஜா! நீங்களே இப்படி பயப்பட்டால் என்ன செய்கிறது? இது ஒரு பிரமாத விஷயமா? 'இங்கு டியூஷன் வாத்தியார் கிடைப்பது சிரமம். அதிலும் ஆண் பிள்ளைகளிடம் பெண்கள் டியூஷன் சொல்லிக் கொள்வது அவ்வளவு நன்றாக இல்லை. வேண்டுமானுல் அங்கேயே டியூஷனுக்கு ஏற்பாடு செய்யவும்' என்று மாப்பிள்ளைச் சிங்கத்திற்குக் கடிதம்




### பழகின தோஷம்!

**ராமன்** (சுப்பன் கொண்டு வந்திருந்த நாய் சதா குலைத்துக் கொண்டிருந்ததைக் கவனித்து):—ஏண்டா சுப்பா! இந்த நாய் ஏன் சதா குரைத்துக் கொண்டே இருக்கிறது?

**சுப்பன்:**—எங்க எஜமான் பக்கத்திலேயே இருந்து பழக்கம்!

—எஸ். பி. பாஸ்கரன்.

●

### அதிசயம்

**கிட்டு**:—அடே ரங்கா! நான் தண்ணீருக்குள் முழுகி அரை மணி நேரம் வெளியே வராமல் இருப்பேன். உன்னால் முடியுமா?

**ரங்கன்**:—இது என்ன பிரமாதம்? நான் தண்ணீருக்குள் முழுகினால் வெளியே வராமலே இருந்து விடுவேனே! —கே. ஏ. அண்ணாசாமி.

●

### நல்ல ஆட்டம்

**சர்க்கஸ் மானேஜர்** (தச்சனிடம்):—என்ன ஐயா! நீர் செய்திருக்கும் நாற்காலி ஒன்றிற்காவது கால் சரியாக இல்லை. இதன்மேல் உட்கார்ந்து ஆட்டம் பார்க்கும் ஜனங்கள் என்ன சொல்வார்கள் என்று யோசித்தீரா?

**ஆசாரி**:—வேறு என்ன சொல்வது? 'நல்ல ஆட்டமாயிருக்குது' என்றுதான் சொல்லுவார்கள்.

—வி. எஸ். கிருஷ்ணசாமி ராவ்.

●

### வித்தியாசம்

**சாப்பிட வந்தவர்**:— இது காப்பியா, டீயா?

**ஹோட்டல் 'சர்வர்'**:— என்ன மாதிரி யிருக்கிறது ருசி?

**சா-வ:**— விளக்கெண்ணெய் மாதிரியிருக்கிறது.

**ஹோ-ச:**— காப்பிதான்; சந்தேகமில்லை. 'டீ' என்றால் கடலை எண்ணெய் மாதிரியிருக்கும்.

—ஆர். ராஜேஸ்வரி.

### செல்லுமா?

**பஸ் கண்டக்டர்:**—ஐயா! இந்த இரண்டணாச் செல்லாது. வேறு துட்டு எடும்.

**பிரயாணி**:—என்ன ஐயா வேடிக்கையாய் இருக்கிறது! இந்த இரண்டணா 1930-ம் வருஷம் அடிக்கப் பட்டிருக்கிறது. இது செல்லாததாக இருந்தால் இத்தனை வருஷமாய்க் கண்டு பிடித்திருக்கமாட்டார்களா?

—கே. ஆர். கல்யாணராமன்.

●

### நிம்மதி வேண்டும்!

**நண்பர்**:—ஏன் ஸார்! இன்றைக்குக் கொஞ்சம் உங்கள் கிராம போனைக் கொடுப்பீரா?

**மற்றவர்:**—ஏன்? ஏதாவது புதிய ரிகார்ட் வாங்கியிருக்கிறீரா?

**நண்பர்**:—இல்லை. இன்றைக்குக் கொஞ்சம் நிம்மதியாகத் தூங்கலாம் என்று கேட்டேன். —சு. ப. ரங்கசாமி.

●

### மாறுதல்

**பிச்சைக்காரன்** (ஒரு உலோபியிடம்):—சாமி! காலணாத் தருமம் கொடுங்கோ?

**உலோபி:**—காலணா சில்லரை இல்லை. ஒரு அணாவாகத்தான் இருக்கிறது.



**பிச்சைக்காரன்**:—பரவாயில்லை, ஒரு அணாவையே கொடுங்கோ. அக வில்லை தான் இப்போது ஒன்றுக்கு நாலா யிருக்கிறதே! —எம். மாணிக்கம்

[ஆனவன் உரை செய: அந்தப் பரதன் அந்த விதமாகக் கேட்கவும்; அழிவில் சிந்தையாள்: வருத்தம் கொஞ்சமும் இல்லாதவளாய்; தானவர் வலி தவ நிமிர்ந்த தானை அத்தேன் அமர் தெரியலான்: அசுரர்களுடைய பலமெல்லாம் ஒழியும்படி பெரிய பெரிய சேனைகளை நடத்தி வெற்றி பெற்று வெற்றி மாலையை அணிந்தான். அதனால் தேவர்களுக்கு நல்ல காலம் பிறந்ததல்லவா? இது உனக்குத் தெரியுமே; தேவர் கைதொழ வானகம் எய்தினன்: இப்போது தேவர்கள் நன்றியோடு வரவேற்க வானலோகம் போயிருக்கிறான்; வருந்தல் நீ என்றாள்: வருந்த வேண்டாம் அப்பா என்றும் சொன்னாள்.]

பார்த்தான் பரதன். தாயின் மன நிலை விளங்கவில்லை. அவனுக்கு மனசு இடிந்தே போய் விட்டது.

எறிந்தன கடியசொல்
செவியுள் எய்தலும்,
நெறிந்தலர் குஞ்சியான்
நெடிது வீழ்ந்தனன்
அறிந்திலன் உயிர்த்திலன்
அசனி ஏற்றினால்
மறிந்(து)உயர் மராமரம்
மண்ணுற்(று) என்னவே.

[எறிந்தன கடிய சொல்: வீசி எறிந்த கல்லைப் போல வேகத்தோடு வந்த சொல்; நெறிந்து அலர் குஞ்சியான்: ஒழுங்காக நெளிந்து விரிந்து கிடந்த முடியை யுடைய பரதன்: அறிந்திலன், உயிர்த்திலன்: உணர்ச்சியற்று மூச்சும் அடங்கியவனாய்; அசனி ஏற்றினால் மறிந்து: பேர் இடியினால் அடியற்று; உயர் மராமரம்: ஓங்கி வளரும் ஒரு வகை மரம்]

தந்தையைப் பார்க்க வேண்டும் என்கிற ஆசை பரதனைத் தூண்டிக் கொண்டே வந்தது. அயோத்தி வந்ததும் இல்லாத சந்தேகங்கள் உண்டாய் விட்டன அவனுக்கு. அரண்மனைக்குள் தந்தை எங்குமில்லை. மனசு தவிக்கிறது. இந்த நிலையில் தாயின் வாயிலிருந்து வார்த்தை வருகிறது வெகு கொடுமையாக. அவனுக்கு நிலை கொள்ளுமா? அவனை அப்படியே பிடித்துத் தரையில் தள்ளுகிறது துயரம்.

நிற்பவனை பரதனைப் பார்த்து; 'கூயள் அன்னை குறுகுதிர் ஈண்டு என: கைகேசி கூப்பிடுகிறாள் இப்போதே வரவேண்டும் என்று; வேய்கொள் தோளி ஒருத்தி விளம்பினள்: பசுமையான வேய் (ஈரக்கழி) போன்ற தோள் கொண்ட பணிப் பெண் ஒருத்தி வந்து சொன்னாள்.]

சரி, என்று கைகேசியினிடமே போய் அவளை வணங்குகிறான்.

வந்து தாயை
அடியில் வணங்கலும்

சிந்தை யாரத்
தழுவினள்; 'நீநிலர்

எந்தை என்னையர்
எங்கையர்?' என்றனள்;

அந்த மில்குணத்
தானும், 'அதாம்' என்றான்.

[நீநிலர், எந்தை என்னையர் எங்கையர்: என்னருமைத் தந்தையார் தாய்மார் தங்கையர்கள் எல்லாரும் சௌகரியமாக இருக்கிறார்களா என்று விசாரித்தாள்; அந்தமில் குணத்தானும் அதாம் என்றான்: உயர்ந்த அன்பும் குணமும் நிறைந்த பரதனும் ஆம் என்று சொன்னான்.]

பரதனது மனம் எல்லாம் வேறு காரியத்தில் இருந்ததால் கைகேசி விசாரித்ததற்குச் சிரத்தை இல்லாமல் ஏதோ ஆமாம் என்றான். அவனுக்கு ஒரே ஆத்திரம். "தந்தையை வணங்க வேண்டும். என் மனசில் ஒரு பரபரப்பு இருக்கிறது. சக்கரவர்த்தி எங்கே இருக்கிறார்? சொல்லம்மா" என்கிறான்.

[வேறு]

மூண்டெழு காதலான்
'மூளரித் தாள்தொழ

வேண்டினென் எய்தினென்
உள்ளம் விம்முமால்,

ஆண்தகை நெடுமுடி
அரசர் கோமகன்,

யாண்டையான்? பணித்திர்' என்(று)
இருகை கூப்பினான்.

[மூண்டு எழு காதலான்: மேலே மேலே எழுகின்ற அன்புடையவனாய்; மூளரித்தாள் தொழ வேண்டினன் எய்தினன்: தாமரைப் புஷ்பம் போன்ற தந்தையின் பாதங்களைத் தொழ வேண்டி யல்லவா இப்போது இங்கே வந்திருக்கிறேன்; உள்ளம் விம்முமால்: மனசு ஒரே ஏக்கமாய் ஏங்குகிறது. ஆண்தகை நெடு முடி அரசர் கோமகன்: வீரம் பொருந்திய நமது சக்கரவர்த்தி: யாண்டையான் பணித்திர்: எங்கே இருக்கிறார்? தயவு செய்து சொல்ல வேண்டும்.]

பரதனது மனசு எவ்வளவோ திகைப்படைந்து வருந்துகிறது என்பது கைகேசிக்குத் தெரியத்தான் செய்கிறது. அதை அவள் கொஞ்சமும் பொருட்படுத்தவில்லை. எக்களிப்பான பாவத்தோடு பதில் சொல்லுகிறாள்.

ஆனவன் உரைசெய
அழிவில் சிந்தையாள்,

'தானவர் வலிதவ
நிமிர்ந்த தானைஅத்

தேனமர் தெரியலான்
தேவர் கைதொழ,

வானகம் எய்தினான்;
வருந்தல் நீ' என்றாள்.



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 61. பேரிடி விழுந்தது!

கேகய நாட்டிலிருந்து, உத்ஸாகமாகப் புறப்பட்டான் பரதன். வந்து பார்த்தான், அயோத்தியை. தேரை விட்டு இறங்கி அரண்மனையை நோக்கிச் செல்லும்போது, ஏதோ துக்க சமாசாரத்தைக் கேட்க வேண்டி யிருக்கும் போலிருக்கிறதே என்று திகைத்தவனாய்த் தயங்கித் தயங்கி நடக்கிறான். அரண்மனைக் குள்ளும் பிரவேசித்து, தந்தை தசரத சக்கரவர்த்தியைப் பார்க்கப் போகிறான். அவரைக் காணவில்லை. அவர் சௌகரியமாய் இருந்து பொழுது போக்குகிற இடங்களை ஒவ்வொன்றாகப் போய்ப் பார்க்கிறான். எங்கும் தென்படவில்லை. மனசுக்குள் ஒரு பயம் தோன்றுகிறது. என்ன விபத்தோ என்ற சந்தேகம் அவனுடைய மனசைக் கலக்குகிறது. ஆனாலும் தந்தையை நினைத்துத் தொழுகிற பாவனையில் மேலும் தேடிச் செல்கிறான்.

ஆய காலையில்
　　ஐயனை நாடித் தன்
தூய கையில்த்
　　தொழலுறு வான்தனை
'கூயள் அன்னை
　　குறுகுதிர் ஈண்(டு)' என
வேய்கொள் தோளி
　　ஒருத்தி விளம்பினாள்

[ஐயனை நாடி: தந்தை தசரதனை நினைத்து: தொழல் உறுவான் தனை : தொழுதுகொண்டு



# வீரமா முனிவர்

ஸ்ரீ சுத்தானந்த பாரதி

சந்தா ஸாஹேப் 1759-ல் புதுக் கோட்டை மீது படையெடுத்தான். அவன் படை ஆவூரில் புகுந்தது. ஆவூர் செழிப்பான செல்வர் ஊர்; அதில் நாட்டுக்கோட்டையாரும், அந்தணரும் வளம் பெற்றிருந்தனர். மற்றவர்களிடையே கிறிஸ்து மதம் பரவி வந்தது. துருக்கர் படை வந்ததும் ஜனங்கள் தீயில் விழுந்த புழுப்போலத் துடித்தனர். அவர்களுக்கு ஒரு வெள்ளைப் பாதிரியார் ஆறுதல் கூறினார். "அஞ்சாதீர்கள்! ஆண்டவன் இருக்கிறான். அவனை நம்புங்கள்" என்று தைரியம் சொன்ன அந்தப் பாதிரிதான் பாதர் பெஷி என்ற **வீரமா முனிவர்**. அவர் ஐரோப்பாவிலிருந்து தமிழகத்தில் கிறிஸ்து மதத்தை நிலைநாட்ட வந்தவர். இலத்தீன் இத்தாலியம் ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பெரும் புலவர். இங்கே **சுப்பிரதீபக் கவிராய**ரிடம் தமிழ் கற்றுச் செய்யுளியற்றும் திறமை பெற்றார். அக் காலத்து அரசியல் மொழியான பார்ஸியும் கற்றார். அவரே நமக்கு முதலில் சதுர அகராதி தந்தார். சிந்தாமணியைப் படித்து எழுச்சி கொண்டு, அவர் ஏசுநாதர் வரலாற்றைத் **தேம்பாவணி** என்னும் அரிய காவியமாகச் செய்தார். அக் காவியத்தைக் கொண்டாடாதவரில்லை. பைபிளுக்கு அடுத்தபடியாக அதைத் தமிழ்க் கிறிஸ்துவர் மதிக்கின்றனர்.

வீரமா முனிவர் சிறந்த தெய்வ பக்தியும் நல்லொழுக்கமுங் கொண்ட துறவி. அன்பு வள்ளல்; அறிவுச் சுடர். அவர் மாதா கோயிலில் தொழுது கொண்டிருந்தபோது சந்தா சாகேபுவின் படைகள் வந்து கோயிலை முற்றுகை போட்டன. முனிவர் படைத் தலைவரிடம் "ஜனங்களைத் தொடாதீர்; என்னை என்ன வேண்டுமானாலும் செய்யலாம்; நான் அவர்கள் சார்பாகப் பேசுகிறேன்" என்றார். பகைவர் அவரைக் கட்டித் தூக்கிக்கொண்டு சென்றனர். முனிவர் ஏசுநாதரின் சிலுவைக் காட்சியையே நினைத்துக் கொண்டிருந்தார். சேனை வீரருக்கு நன்மொழி கூறி, "ஐயா, கொலை தீது, போர் கொடிது" என்றார். "சுப்ரகோ" என்று அவர் வாயை அடைத்து, வீரர் அவரைச் சாந்தா சாகேபு முன் கொண்டு சென்று, "இவன் கொடிய பகைவன். ஜனங்களுக்கெல்லாம் நம்மை எதிர்க்க உபதேசம் செய்து, தமிழில் உளறினான். இவனைச் சிரச்சேதம் செய்ய வேண்டும்" என்றார்கள். "ஐயா! எனக்கு உங்கள் பாஷையிலும் உளறத் தெரியும்" என்று முனிவர் பார்ஸியில் குரான் மேற்கோளுடன் தருமநீதி சொன்னார். சந்தா சாகேபு தனது தாய்மொழியில் ஓர் இத்தாலியன் பேசுவதைக் கேட்டு வியந்து, தன் கையினாலேயே கட்டறுத்து முனிவரை விடுவித்து, அவர் அறிவை மெச்சித் தன் மந்திரியாக்கிக் கொண்டான்.

கைதி பெஷி, மந்திரி மஹராஜ் ஆனார்.—எதனால்? எதிரியின் தாய்மொழி பேசியதால் வீரமா முனிவர் சந்தா ஸாஹேபுக்குத் தமிழின் அருமை பெருமைகளைப் பார்ஸியில் விளக்கினார்; திருக்குறளையும் திருக்குரானையும் ஒப்பிட்டு அறவுரை பேசினார்; போர் வெறி பிடித்து வந்த சந்தா ஸாஹேபு அதிகத் தொல்லை செய்யாமல் திரும்பிச் சென்று விட்டான்.

**தாய்மொழியே தாரகமாம்**
**தாய்மொழியே மாற்றாரின்**

**காய்மொழியை மாற்றுங்**
**கனிமொழியாம்—தாய்மொழியே**

**உள்ளத்தீற் ருள்ளம்**
**உணரன்பு மின்சார**

**வெள்ள மெனவே**
**விரும்பு.**



★

## மன்னிப்பு!

பையன்:—ஏன் அப்பா? பல்லி காலில் விழுந்தது. என்ன செய்கிறது அப்பா?

தகப்பனார் (எங்கேயோ கவனமாக):—காலில் விழுந்தால் மன்னித்து விடுகிறதுதானே! என்னை வந்து என்ன கேள்வி?



நரசிம்மா! ஆனாலும், முடிவில் அவனை முறியடித்து நாம் வெற்றி மாலை சூடுவோம், சந்தேகமில்லை. நீ மட்டும் எனக்கு உதவி செய்ய வேண்டும். நான் சொல்வது உனக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் அதன்படி நடக்க வேண்டும்......"

அப்போது நரசிம்மர் மிக்க உணர்ச்சியோடும் உருக்கத்தோடும் தழதழத்த குரலில், "அப்பா! என்னிடம் தாங்கள் உதவி கோரவேண்டுமா! தாங்கள் என் அன்புக்குரிய அருமைத் தந்தை மட்டுமல்ல; என் உடல் பொருள் ஆவிக்கு உரிமையுடைய அரசர்; எனக்கு எப்பேர்ப்பட்ட கட்டளையையும் இடுவதற்கு அதிகாரமுள்ள பல்லவ சாம்ராஜ்யத்தின் பிரதம சேனாதிபதி. எவ்வளவு கசப்பான கட்டளை வேண்டுமானாலும் இடுங்கள்; நிறைவேற்றக் காத்திருக்கிறேன்" என்றார்.

மகேந்திரர் சற்று மௌனமாயிருந்தார். அப்போது கீழ்த்திசையில் சிறிது தூரத்தில் துறைமுகக் காட்சி தென்பட்டது. கப்பல்களின்மேல் கம்பீரமாகப் பறந்த ரிஷபக் கொடிகள் வானத்தை மறைத்தன. அதற்குச் சற்றுத் தென்புறத்தில் மாமல்லபுரத்துக் குன்றுகள் — அழகிய ரதங்களைப்போல் சிற்பவேலை செய்யப்பட்டு வந்த குன்றுகள் — காட்சியளித்தன.

சிறிது நேரம் அந்தக் காட்சியில் கவனம் செலுத்திக் கொண்டிருந்த மகேந்திரர், சட்டென்று நரசிம்மரின் பக்கம் திரும்பி, "நரசிம்மா! நாளை மறுநாள் நான் போர்க்களத்துக்குக் கிளம்புகிறேன் என்று சொன்னேனல்லவா? போர்க்களத்திலிருந்து திரும்பி வந்து இந்த மாமல்லபுரத்தில் நாம் ஆரம்பித்த சிற்பவேலை பூர்த்தியாவதைக் காண்பேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்றார்.

நரசிம்மர் மௌனமாயிருக்கவே, மகேந்திரர் மேலும் கூறுவார்:— "அப்படி ஒருவேளை நான் திரும்பி வராவிட்டால், இந்தச் சிற்பப் பணியை நீதான் தொடர்ந்து நடத்திப் பூர்த்தி செய்ய வேண்டும், நரசிம்மா!"

"இந்த வாக்குறுதியைத்தானா என்னிடம் கோரினீர்கள்?" என்று மாமல்லர் வெடுக்கென்று கேட்டபோது அவருடைய குரலில் வெறுப்பு தொனித்தது.

"இல்லை, அதைக் கேட்கவில்லை. நான் ஒருவேளை போர்க்களத்திலிருந்து திரும்பி வராவிட்டால் எனக்காக நீ பழிக்குப் பழி வாங்கவேண்டும். புலிகேசியின் படையெடுப்பினால் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு ஏற்பட்ட அவமானத்தையும் பழியையும் துடைக்க வேண்டும்."

"இது என் கடமை; கடமையை நிறைவேற்றுவதற்கு வாக்குறுதி வேண்டுமா?"

"குமாரா! அவ்விதம் பழிக்குப் பழி வாங்குவதற்காக நீ உன் உயிரைப் பத்திரமாய்க் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்."

நரசிம்மர் மௌனமாயிருந்தார். இன்னும் ஏதோ வரப் போகிறதென்று அவர் கவலையுடன் எதிர்பார்த்ததாகத் தோன்றியது.

"குழந்தாய்! சென்ற ஐந்நூறு ஆண்டு காலமாக வாழையடி வாழையாக வந்திருக்கும் இந்தப் பல்லவ குலம் இனியும் நீடிப்பது உன் ஒருவனையே பொறுத்திருக்கிறது. உன்னிடம் நான் கேட்கும் வாக்குறுதி இதுதான்: நான் திரும்பி வரும் வரையில், அல்லது நான் திரும்பி வரமாட்டேன் என்று நிச்சயமாய்த் தெரியும் வரையில், நீ காஞ்சிக் கோட்டையிலேயே இருக்க வேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் கோட்டைக்கு வெளியே வரக்கூடாது. இதோ என் கையைத் தொட்டுச் சத்தியம் செய்து கொடு!" என்று கூறி மகேந்திரர் தம் வலது கரத்தை நீட்டினார்.

நரசிம்மர் அவருடைய நீட்டிய கையைத் தொட்டு, "அப்படியே ஆகட்டும், அப்பா! தாங்கள் திரும்பி வரும் வரையில் காஞ்சிக் கோட்டையிலேயே இருப்பேன்!" என்றார்.

திடீரென்று தூரத்தில் சமுத்திரம் 'ஹோ' என்று ஆங்காரத்துடன் இரையும் பேரொலி கேட்டது.

மாமல்லரின் உள்ளத்திலும் அலைகளைப்போல் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் தோன்றி மறைந்தன.

சக்கரவர்த்தி ஆரம்பித்து இடையில் நிறுத்தியபோது. அவருடைய குரலில் ஏமாற்றம் தொனித்தது.

"அது தான் என் தவறு, நரசிம்மா! என் வாழ்நாளில் இப்படிப்பட்ட ஒரு யுத்தம் வருமென்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆதலின், போர்க் கலையில் கவனம் செலுத்தவேண்டிய காலத்தையெல்லாம் ஆடலிலும் பாடலிலும் சிற்பத்திலும் சித்திரத்திலும் கழித்து விட்டேன் ......"

"அதற்காக வருத்தப்பட வேண்டுமா, அப்பா? சற்று முன்னால் ஆயனர் சொன்னாரே? உலகத்தில் எத்தனையோ சக்கரவர்த்திகள் இருந்தார்கள்; மறைந்தார்கள். அவர்களுடைய பெயர்களைக்கூட உலகம் மறந்து போய் விட்டது. ஆனால், தங்களுடைய பெயரை என்றென்றைக்கும் உலகம் மறக்க முடியாது."

"உண்மைதான்; ஆனால், இந்த யுத்தத்தில் மட்டும் நாம் ஜயிக்காமற் போனால், மாமல்லபுரத்து மகத்தான சிற்பங்கள் எல்லாம் என்றென்றைக்கும் நமது அவமானத்துக்கே சின்னங்களாக விளங்கும், நரசிம்மா!"

"இல்லை அப்பா, இல்லை! ஒரு நாளும் இல்லை. யுத்தத்தில் தோல்வியடைந்து உயிரையும் வைத்துக்கொண்டிருந்தாலல்லவா தாங்கள் சொல்கிறபடி ஏற்படும்? போர்க்களத்தில் புறங்காட்டி ஓடி ஒளிந்து கொள்கிறவர்களையல்லவா உலகம் பழித்து நிந்திக்கும்? அந்த எண்ணம் அணுவளவும் இல்லாதபோது, அவமானத்துக்கும் பழிக்கும் நாம் ஏன் பயப்பட வேண்டும்?" என்று மாமல்லர் ஆத்திரத்துடன் கூறினார்.

"ஆம், நரசிம்மா! இந்த வீர பல்லவ குலத்துக்கு உன்னாலும் என்னாலும் அவமானம் ஏற்படப் போவதில்லையென்பது நிச்சயம். முடிவில் போர்க்களத்தில் வீர மரணம் இருக்கவே இருக்கிறது. ஆனால், அதற்கு முன்னால் நமது பகைவர்களை வேரோடு அழித்து வெற்றியடையவே பார்க்க வேண்டுமல்லவா? அது அப்படி அசாத்தியமான காரியமும் இல்லை; அவகாசந்தான் வேண்டும். வாதாபியின் படைகள் பல்லவ ராஜ்யத்துக்குள் இவ்வளவு சுலபமாக எவ்விதம் புக முடிந்தது? அப்படைகளை எதிர்த்து அழிப்பதற்கு நாம் ஏன் தற்சமயம் ஆயத்தமாயில்லையென்பதற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. அதைச் சொன்னால் நான் என்னுடைய தவறை மறைப்பதற்காகச் சொல்வதாய்த் தோன்றக் கூடும் ......"

"எனக்கு அப்படித் தோன்றும் என்றா சொல்கிறீர்கள்?" என்று மாமல்லர் கோபக் குரலில் கேட்டார்.

"இல்லை; உனக்கு அப்படித் தோன்றாது. ஆனால் உலகம் அவ்விதம் நினைக்கும். ஆகையினால், உலகத்துக்கு அந்தக் காரணத்தை நான் சொல்லப் போவதில்லை. உனக்கு மட்டும் சொல்கிறேன், கேள்:

உத்தர பாரத தேசத்தில், ஹிமோத்கிரியிலிருந்து விந்திய பர்வதம் வரையில் பரந்த மகா சாம்ராஜ்யத்தை ஹர்ஷ வர்த்தனர் ஆண்டு வருகிறார். இது உனக்குத் தெரிந்ததுதான். ஹர்ஷருக்கும் வாதாபி சளுக்கருக்கும் நெடுங்காலமாகப் போர் நடந்து கொண்டிருந்தது. அந்த யுத்தத்தில் வாதாபிப் படைகள் அடியோடு அழிந்து விடுமென்று எண்ணியிருந்தேன். ஆரியாவர்த்தத்தில் சமயச் சண்டைகளை ஒழித்து சர்வ மத சமரசத்தை நிலைநாட்டி வருகிற அந்த மகா வீரரின் சிநேகத்தைக் கோரி, கன்யா குப்ஜத்துக்குத் தூதர்களை அனுப்பவும் எண்ணியிருந்தேன். ஆனால், சில மாதங்களுக்கு முன்பு திடீரென்று யுத்தம் நின்று, புலிகேசிக்கும் ஹர்ஷ வர்த்தனருக்கும் உடன்படிக்கை ஏற்பட்டு விட்டதாம். நர்மதை நதிக்கரை வரையில் ஹர்ஷருடைய சாம்ராஜ்யம் என்றும், நர்மதைக்குத் தெற்கே வாதாபி சாம்ராஜ்யம் என்றும் ஏற்படுத்திக் கொண்டார்களாம். இந்தச் செய்தியை நம்முடைய ஒற்றர்கள் கொண்டு வருவதற்கு முன்னால், வாதாபி சைன்யங்கள் துங்கபத்ராவைக் கடந்து கங்க நாட்டில் பிரவேசித்து விட்டன. கங்க அரசன் துர்விநீதன் புலிகேசிக்குப் பணிந்தது மட்டுமல்ல; அவனுடன் சேர்ந்து கொண்டான் என்றும் தெரிகிறது. வாதாபி மன்னன் யுத்த தந்திரத்தை நன்கு அறிந்திருக்கிறான்,

"நான் சொல்லவேண்டியதையெல்லாம் சொல்லிவிடுகிறேன், நரசிம்மா! பிறகு, நீ கேட்கவேண்டியதைக் கேட்கலாம்" என்று சக்கரவர்த்தி கூறியதும், நரசிம்மர் மௌனமாயிருந்தார்.

மகேந்திரர் சொல்கிறார்:—"இந்தப் புராதனமான பல்லவ சாம்ராஜ்யத்தில் யுத்தம் என்று நடந்து வெகுகாலம் ஆகிவிட்டது. இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் நான் இந்த ராஜ்யத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பிறகு யுத்தம் என்பதே நடக்கவில்லை. என் தந்தை சிம்ம விஷ்ணு மகாராஜாவின் காலத்திலும் பெரிய யுத்தம் நடந்தது கிடையாது. அவருடைய ஆட்சியின் ஆரம்பத்தில், சோழ நாட்டுக்கும் பாண்டிய நாட்டுக்கும் நடுவில் புல்லுருவியைப் போல் கிளம்பியிருந்த களப்பாள வம்சத்தை நிர்மூலம் செய்து உறையூர்ச் சிம்மாசனத்தில் சோழ வம்சத்தை நிலைநாட்டினார். அதன் பிறகு பல்லவ சைன்யங்களுக்கு வேலையே இருக்கவில்லை. நான் உன்னைப்போல் வாலிபனாயிருந்த காலத்தில் இலங்கைமீது படையெடுப்பதற்காக ஒரு சைன்யத்தை என் தந்தை அனுப்பினார். போர் முறைகளில் நான் பயிற்சி பெறுவதற்காக என்னையும் அந்தச் சைன்யத்துடன் அனுப்பி வைத்தார். ஆனால், இலங்கை மன்னன் யுத்தம் செய்யவே இல்லை. ஒரு நாள் சண்டை முடிந்தவுடனேயே அவன் பணிந்து வந்து பல்லவ சக்கரவர்த்தியின் சிநேகத்தைக் கோரினான். எனவே, யுத்தத்தைக் கண்ணால் பார்க்காமலே நான் திரும்ப வேண்டியதாயிற்று.

இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் பொறுப்பை நான் ஏற்றுக்கொண்ட பிறகோ, யுத்தத்திற்கு எவ்வித முகாந்திரமும் ஏற்படவில்லை. ஆகையால் எனக்கு யுத்தம் நடத்தும் சந்தர்ப்பமே இல்லாமல் போய்விட்டது. இப்போது தான் முதன் முதலாக என் காலத்தில் யுத்தம் வந்திருக்கிறது, நரசிம்மா! இதை என் இஷ்டப்படி நடத்துவதற்கு மந்திரி மண்டலத்தாரின் அநுமதி கோரப் போகிறேன். அதற்கு நீயும் அநுமதி கொடுக்க வேண்டும். இந்த யுத்தத்தில் வெற்றியோ தோல்வியோ, எது வந்தாலும் என் தலையோடு போகட்டும். உனக்கு அதில் பங்கு வேண்டியதில்லை ......"

இத்தனை நேரம் பொறுமையுடனிருந்த நரசிம்மர் இப்போது குறுக்கிட்டு, "அப்பா! தோல்வி என்ற வார்த்தையை ஏன் சொல்கிறீர்கள்? யுத்தத்தில் நாம் அடையக் கூடியது வெற்றி அல்லது வீர மரணந்தானே? அதில் எனக்குப் பங்கு எப்படி இல்லாமற் போகும்?" என்றார்.

"வீர பல்லவ குலத்துக்கு உகந்த வார்த்தை கூறினாய், நரசிம்மா! வெற்றி அல்லது வீர மரணந்தான் நமது குலதர்மம். ஆனால் வீர மரணத்தை நாம் இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் தேடி அடைய வேண்டியதில்லையல்லவா? ஒருவர் செய்த தவறுகளைத் திருத்த இன்னொருவர் உயிர் வாழ வேண்டுமல்லவா? ஒருவரைப் பழி வாங்க இன்னொருவர் இருக்க வேண்டுமல்லவா?"

"அப்பா! போர்க்களத்திலிருந்து ஏதோ ரொம்பவும் கெடுதலான செய்தி வந்திருக்கிறது; — அதனால் தான் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்."

"ஆம், குழந்தாய்! கெடுதலான செய்தி தான் வந்திருக்கிறது. கங்கபாடிப் படை புலிகேசிக்குப் பணிந்து விட்டது, நரசிம்மா! வாதாபி சைன்யம் வட பெண்ணையை நோக்கி விரைந்து வந்துகொண்டிருக்கிறது."

"இவ்வளவுதானே, அப்பா? தொடை நடுங்கி துர்விநீதனிடம் அதை நாம் எதிர்பார்க்கக் கூடியதுதான். அதனால் என்ன? வட பெண்ணைக் கரையில் நமது வடக்கு மண்டலத்துச் சைன்யம் அணி வகுத்து நிற்கிறதல்லவா? வேங்கியிலிருந்து என் மாமா பெரும் படை பலத்துடன் கிளம்பி வருகிறாரல்லவா?"

"நரசிம்மா! வேங்கி சைன்யம் நமது உதவிக்கு வராது. புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனன் இன்னொரு பெரும் படையுடன் வேங்கியை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறானாம். கிருஷ்ணா நதியின் வடகரையோடு, அந்த சைன்யம் அதிவேகமாகப் போய்க் கொண்டிருக்கிறதாம்."

"ஆஹா! வாதாபியின் சைன்ய பலம் அவ்வளவு அதிகமா? நாம் மட்டும் ஏன் ......?" என்று குமார

டிருந்தேன். எனக்குத் தாங்கள் கட்டளை யிட்டால் போதாதா? தங்கள் விருப்பத்திற்கு மாறாக நான் நடப்பேனா? எப்போதாவது நடந்த துண்டா?"

இந்த வார்த்தைகள் குமார சக்கர வர்த்தி இருதய பூர்வமாகக் கூறியவை யான படியால் சொல்லும்போது அவருடைய நாத் தழுதழுத்தது.

மகேந்திரரும் உணர்ச்சி மிகுதியினால் சற்றுச் சும்மா இருந்துவிட்டு, பிறகு கூறினார்:—"பல்லவ சிம்மா! நான் எவ்வளவு கசப்பான கட்டளை யிட்டாலும் நீ நிறைவேற்றுவாய் என்று எனக்குத் தெரியும். ஆனாலும், காரியத்தின் முக்கியத்தைக் கருதி உன்னிடம் வாக்குறுதி பெறவேண்டி யிருக்கிறது. அதற்கு முன்னால் நான் உனக்குச் சில முக்கியமான விஷயங்களைச் சொல்லியாக வேண்டும். நாளை மறு நாள் நான் போர்க்களத்துக்குக் கிளம்புகிறேன். எப்போது திரும்பி வருவேன் என்று சொல்லுவதற்கில்லை..."

"அப்பா! என்ன சொல்கிறீர்கள்? போர்க் களத்துக்குத் தாங்கள் கிளம்புகிறீர்களா? என்னை இங்கே விட்டு விட்டா?" என்று மாமல்லர் மிக்க ஆத்திரத்துடன் கேட்டார்.



கரையில் நின்ற பரிவாரங்கள் முன்னால் வந்த படகிலே ஏறி அமர்ந்தார்கள்.

சக்கரவர்த்தியும் குமாரரும் குதிரைகளை இரு ஏவலாளரிடம் ஒப்புவித்து விட்டு, நடுவில் வந்த "இராஜ ஹம்ஸ"த்தில் ஏறி வெண் கொற்றக் குடையின் கீழ்த் தங்கச் சிங்காதனத்தில் அமர்ந்தார்கள்.

படகுகள் மூன்றும் அதே வரிசையில் துறைமுகத்தை நோக்கிப் புறப்பட்டன.

**வா**த்திய முழக்கங்கள் நின்றதும், சக்கரவர்த்தி தம் குமாரரைப் பார்த்து, "நரசிம்மா! நான் உன்னிடம் வாக்குறுதி கேட்பதே உனக்கு விந்தையாயிருக்கும். அதற்கு நீ உடனே மறுமொழி கூறுவதும் நியாயந்தான். விஷயம் இன்னதென்று தெரிந்து கொள்ளாமல் எந்த வாக்குறுதியும் கொடுக்கக் கூடாது. இராஜ்யம் ஆளும் பொறுப்பு உடையவர்கள் இதில் சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்!" என்றார்.

"அதற்காக நான் தயங்கவில்லை, அப்பா! தாங்கள் என்னிடம் வாக்குறுதி கேட்க வேண்டுமா என்று தான் யோசனை செய்து கொண்



"ஆம், அப்பா!"

"கோட்டைக்கு வெளியே போக ஏதோ கள்ள வழி இருக்க வேண்டும் என்று சந்தேகித்தேன்."

"ஆ! என்னிடம் தாங்கள் சொல்லவில்லையே?"

"அந்தக் கள்ள வழி எங்கே இருக்கிறதென்று சற்று முன்னால் கண்டு பிடித்தேன்!"

"ஆஹா! தெரிகிறது! அதனால் தான் குதிரையை அவ்வளவு வேகமாய் விட்டுக் கொண்டு வந்தீர்களா?"

"நேரே காஞ்சிக்குப் போகலாமென்று நினைத்து அவ்வளவு விரைவாக வந்தேன். ஆனால் அவசரம் ஒன்றும் இல்லை. நாளைக்குத் திரும்பிப் போன பிறகே பார்த்துக்கொள்ளலாம்."

"எந்த இடத்தில் பார்க்கப் போகிறீர்கள்?"

"இராஜ விஹாரத்தில் புத்த பகவானுடைய விக்கிரகத்துக்குப் பின்னால் பார்க்க வேண்டும், நரசிம்மா!"

சக்கரவர்த்தியின் அறிவுக் கூர்மையைப் பற்றி நரசிம்மர் அளவற்ற வியப்புக் கொண்டவராய் இன்னது சொல்வதென்று தெரியாமல் திகைத்து நிற்கையில், "அதோ இராஜஹம்ஸம்!" என்று மகேந்திரர் கூறியதைக் கேட்டு மேற்கே நோக்கினார். காஞ்சி நகர்ப் பக்கத்திலிருந்து மூன்று படகுகள் கால்வாயில் வந்து கொண்டிருந்தன. அவற்றில் நடுவில் வந்த படகு சங்கையொத்த வெண்ணிறமுடையதாய் அழகிய இராஜ ஹம்ஸத்தின் உருவமாக அமைக்கப் பட்டிருந்தது. அதில் ஒரு பக்கத்தில் அமைந்திருந்த தங்கச் சிங்காதனம் பளபளவென்று மின்னிற்று. அதன் மேல் விசாலமான வெண் கொற்றக் குடை விரிந்திருந்தது. எல்லாவற்றுக்கும் மேலே பல்லவ சாம்ராஜ்யத்தின் ரிஷபக் கொடி கம்பீரமாய்ப் பறந்தது.

முதலிலும் நடுவிலும் வந்த படகுகள், படகோட்டிகளைத் தவிர மற்றப்படி வெறுமையாயிருந்தன. கடைசியாக வந்த மூன்றாவது படகில் பலர் அமர்ந்திருந்தார்கள்.

"ஆ! மந்திரி மண்டலத்தாரும் வருகிறார்களே!" என்றார் நரசிம்மர்.

"ஆம்; இன்றைக்குத் துறைமுகத்தில் மந்திரி மண்டலம் கூடப் போகிறது. அதற்கு முன்னால் உன்னிடம் நான் சில விஷயங்கள் சொல்ல வேண்டும், நரசிம்மா! அதோடு, உன்னிடம் ஒரு வாக்குறுதி கோரப் போகிறேன். அதை நீ தட்டாமல் தரவேண்டும்!" என்றார் மகேந்திரர்.

நரசிம்மருக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டவளான சிவகாமி தாமரைக் குளக்கரையில் அவரிடம் வாக்குறுதி கேட்டு வாங்கிக் கொண்டு ஒரு முகூர்த்த நேரங்கூட ஆகவில்லை. அதற்குள் அவருடைய அன்புக்கும் பக்திக்கும் உரியவரான தந்தை வாக்குறுதி கேட்கிறார்!

இவ்விதம் மாமல்லர் யோசித்துக் கொண்டிருக்கும் போதே படகுகள் மூன்றும் அவர்கள் இருந்த இடத்தை நெருங்கின.

### இருபத்துநான்காம் அத்தியாயம்

## வாக்குறுதி

சக்கரவர்த்திக்குப் பின்னால் கால் நடையாக வந்த இராஜ பரிவாரங்களும் இதற்குள்ளே கால்வாயின் கரைக்கு வந்து விட்டன.

"மகாராஜாதிராஜ திரிபுவன சக்கரவர்த்தி குணபர மகேந்திர பல்லவேந்திரர் வாழ்க!" என்ற கோஷம் மந்திரி மண்டலத்தார் வீற்றிருந்த படகிலிருந்து எழுந்தது.

"மகாராஜாதிராஜ அவனிசிம்ம லளிதாங்குர சத்ருமல்ல விசித்திர சித்த மத்தவிலாஸ சித்திரக்காரப் புலி குணபர மகேந்திர பல்லவேந்திரர் வாழ்க!" என்ற கோஷம் கரையிலிருந்து எழுந்தது.

"வாழ்க! வாழ்க!" என்ற கோஷம் இரு பக்கங்களிலிருந்தும் எழுந்து வானளாவியது.

சங்கங்களும், எக்காளங்களும் காது செவிடு படும்படி முழங்கின; முரசங்களும் பேரிகைகளும் எட்டுத் திசையும் அதிரும்படி ஆர்த்தன.

"அந்த வாலிபனைப் பார்த்து இந்த வேலாயுதத்தை அவனிடம் ஒப்புவிக்க வேண்டும். புத்த பிக்ஷுவுடன் அன்றிரவு நாம் பார்த்த பிள்ளைதான் இந்த வேலுக்குரியவன் என்று தாங்கள் சொன்னீர்கள் அல்லவா?"

"அன்று ஊகித்துச் சொன்னேன்; இன்றைக்கு நிச்சயமாயிற்று. ஆனால், அந்த வாலிபனுக்கு வேல் இனிமேல் தேவையில்லை, நரசிம்மா! அதோ போகிறதே, ஆயுதப் படகு அதிலுள்ள பழைய வேல்களுடன் இதையும் நீ சேர்த்து விடலாம்!"

"ஏன், அப்பா?"

"பரஞ்சோதி என்கிற அந்த வாலிபன் ஆயனரிடம் சிற்பக் கலை கற்கப் போகிறான்; அவனுக்கு வேல் வேண்டியதில்லை."

"பரஞ்சோதி! — பரஞ்சோதி! — என்ன கம்பீரமான பெயர்! தங்களுக்கு எப்படித் தெரிந்தது, அப்பா?"

"அவன் மாமனிடமிருந்து கொண்டு வந்த ஓலையைப் பார்த்ததினாலே தெரிந்தது."

"ஆகா! அந்த வீர வாலிபனைப் பற்றி என்னவெல்லாம் ஆசை கொண்டிருந்தேன்? அவனைக் கண்டு பிடித்து என் ஆருயிர்த் தோழனாகக் கொள்ள விரும்பினேனே!"

"அது நிறைவேறாதென்று நான் சொல்லவில்லையே!"

"எப்படி அப்பா நிறைவேறும்? பகைவர்களின் ஒற்றர்களுடன் நான் தோழமை கொள்வதா?"

"அந்த வாலிபனை ஒற்றன் என்று நான் சொல்லவில்லையே!"

"பின் எதற்காக அவன் புத்த விக்கிரகத்துக்குப் பின்னால் ஒளிந்து கொண்டான்?"

"அதைத்தான் கண்டு பிடிக்க வேண்டும்."

"ஆ! இப்போது தெரிந்தது!"

"என்ன தெரிந்தது, நரசிம்மா?"

"அந்த வாலிபன் குற்றமற்றவன்; இந்த நாட்டுக்குப் புதிதாக வந்தவன். அவனைக் கொண்டு அந்தக் கள்ள பிக்ஷு ஏதோ சூழ்வினை செய்யப் பார்க்கிறான்."

"இருக்கலாம்."

"உண்மையைக் கண்டு பிடிப்பதற்குத்தான் சத்ருக்னனைத் தாங்கள் அனுப்பியிருக்கிறீர்கள்."

"ஆம்; ஆனால் எனக்கு நம்பிக்கை இல்லை."

"எதில் நம்பிக்கை இல்லை, அப்பா?"

"சத்ருக்னன் உண்மையைக் கண்டு பிடிப்பான் என்ற நம்பிக்கை இல்லை."

"ஆகா! பல்லவ சாம்ராஜ்யத்தின் மகா மேதாவியான ஒற்றனைப்பற்றியா அவ்விதம் சொல்கிறீர்கள்?"

"ஆனால், அந்தப் புத்த பிக்ஷு வாதாபி சாம்ராஜ்யத்தின் மகா சதுரனான ஒற்றனாயிருக்கலாமல்லவா?"

"அப்பா! தங்களுடைய நிதானம் எனக்கு மிகுந்த வியப்பை யளிக்கிறது."

"எதைப் பற்றிச் சொல்கிறாய், நரசிம்மா?"

"அன்றிரவே அந்தப் புத்த பிக்ஷுவைப் பற்றித் தாங்கள் சந்தேகம் கொண்டீர்கள். உடனே அவனை ஏன் சிறைப்படுத்தவில்லை? வெளியிலே விட்டு ஏன் வேடிக்கை பார்க்கிறீர்கள்?"

"அன்றிரவு சிறைப்படுத்தியிருந்தால், பல்லவ ராஜ்யத்துக்கு ஏற்பட்டிருக்கும் ஒரு பயங்கரமான அபாயம் எனக்குத் தெரியாமல் போயிருக்கும்."

"பயங்கர அபாயமா?" என்று கூறி நரசிம்மர் ஆவலுடனும் பரபரப்புடனும் மகேந்திரரை நோக்கினார்.

"ஆம்."

"அது என்ன, அப்பா?"

"அன்றிரவு நாம் புத்த பிக்ஷுவையும் வாலிபனையும் பார்த்தோம்; மறுநாள் காலையில் அவர்களை இராஜ விஹாரத்தில் காணவில்லை யல்லவா?"

"அதன் காரணந்தான் இப்போது தெரிகிறதே!"

"ஆனால் அவர்கள் எந்தக் கோட்டை வாசலின் வழியாகவும் வெளியே போனதாகத் தெரியவில்லை யல்லவா?"

"ஆமாம்!"

"அவர்கள் எப்படி மாயமாய் மறைந்திருக்கக் கூடுமென்று வியப்பாயிருந்ததல்லவா?"




### இருபத்துமூன்றாம் அத்தியாயம்

## இராஜ ஹம்சம்

நரசிம்மருடைய வெட்கத்தைக் கண்டு அவருக்குத் தேறுதல் சொல்பவர்போல் மகேந்திரர் கூறினார்:—

"நரசிம்மா! ஆயனர் வீட்டுக்குள் போனால் அங்குள்ள சிற்ப - சித்திர அதிசயங்களில் கண்ணையும் கருத்தையும் பறிகொடுப்பது இயற்கைதான். நானே அப்படித்தான் மெய்மறந்து விடுவது வழக்கம். இன்றைக்குச் சந்தேகத்துடன் நான் சென்றபடியால் கூர்மையாகக் கவனித்தேன்......"

நரசிம்மர் ஒருவாறு தம் மனக் குழப்பத்தைச் சமாளித்துக் கொண்டு, "கவனித்ததில் என்ன கண்டீர்கள், அப்பா? சிற்பங்களையும் சித்திரங்களையும் தவிர, வேறொன்றையும் நான் காணவில்லையே?" என்றார்.

"ஆயனரின் நடவடிக்கையில் உனக்கு எவ்விதச் சந்தேகமும் உண்டாகவில்லையா, நரசிம்மா?"

மாமல்லர் மௌனமாயிருந்தார்.

"அடிக்கடி அவர் கவலையுடன் புத்தர் சிலையின் பக்கம் திரும்பினாரே, அதைக் கவனிக்கவில்லையா?"

மாமல்லரின் கண்கள் அகன்று விரிந்தன.

"புத்தர் சிலைக்கு அருகில் நாம் சென்றதும், ஆயனர் தயங்கித் தடுமாறியதையும் நீ கவனிக்கவில்லையா?"

அப்போது நரசிம்மர் திடுக்கிட்டவராய், "அப்பா! அந்தப் பெரிய புத்த விக்கிரகத்துக்குப் பின்னால் யாராவது மறைந்திருந்தார்களா?" என்றார்.

"ஆம், நரசிம்மா! இரண்டு பேர் இருந்தார்கள்!"

சொல்ல முடியாத வியப்புடனும் ஆவலுடனும் நரசிம்மர், "உண்மையாகவா? அவர்கள் யார்?" என்று கேட்டார்.

"அன்றிரவு இராஜ விஹாரத்துக்கு அருகில் ஒரு புத்த பிக்ஷுவையும் ஒரு வாலிபனையும் நாம் பார்க்கவில்லையா?"

"ஆம்."

"அவர்கள் மறுநாள் மாயமாய் மறைந்து போய்விடவில்லையா?"

"ஆமாம்."

"அந்த இருவருந்தான்."

"ஆஹா! அவர்கள் ஆயனர் வீட்டில் புத்தர் சிலைக்குப் பின்னால் ஒளிந்திருந்தார்களா?"

"ஆம்; ஆனால் ஒளிந்து கொள்ளும் கலையை அவர்கள் நன்கு கற்கவில்லை......!"

"தங்களுக்கு மூன்றாவது கண் உண்டு என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும், அப்பா? ஆயனரின் வீட்டில் தாங்கள் அவ்வளவு நேரம் தங்கியது எனக்குச் சிறிது வியப்பை அளித்தது. இப்போதுதான் காரணம் தெரிகிறது!" என்று நரசிம்மர் பெருமிதத்துடன் கூறினார். மகேந்திரர் இதற்கு விடையொன்றும் கூறாமல் கால்வாயின் மேற்குத் திசையை நோக்கினார்.

திடீரென்று, "அப்பா! ஆயனர் வீட்டுக்கு நான் மறுபடியும் போய் வரவேண்டும்" என்றார் மாமல்லர்.

"எதற்காக, நரசிம்மா?"

தேவராஜன் இவற்றைப் பெற்றுக் கொண்டு "யாரும் செய்யக்கூடாத அரிய செயலைச் செய்தாய்!" என்று புகழ்ந்து, "நீ விரும்புகிற வரத்தைக் கேள்" என்றான். "சத்துருக்களை சம்ஹரிக்கக் கூடிய உன்னுடைய சக்தி ஆயுதத்தைப் பெற விரும்புகிறேன்" என்று கர்ணன் சொல்ல, இந்திரன் மகிழ்ச்சி அடைந்து அவ்வாறே கொடுத்தான். "நீ யுத்தத்தில் இதைப் பிரயோகித்தால் அவன் யாராயினும் இதனால் நாசமடைவான்; ஆனால் ஒரு சத்துருவைக் கொன்றதும் இந்த ஆயுதம் என்னிடம் வந்து விடும்" என்று சொல்லி விட்டு இந்திரன் மறைந்தான்.

கர்ணன் பரசுராமரிடம் சென்று தான் பிராமணன் என்று சொல்லி அவரிடம் சீடனாக அமர்ந்து பிரம்மாஸ்திர மந்திரத்தைக் கற்றான். ஒருநாள் கர்ணன் மடியில் தலை வைத்துப் பரசுராமர் தூங்கிக்கொண்டிருந்தார். அச்சமயம் ஒரு கொடிய புழுவானது கர்ணன் துடையைக் கடித்துக் குடைந்தது; ரத்தம் பெருகிற்று. தூங்கிக் கொண்டிருந்த குரு எழுந்து விடுவார் என்று அந்த உபத்திரவத்தை லட்சியம் செய்யாமல், கர்ணன் அசையாதிருந்தான். பரசுராமர் விழித்தெழுந்து ரத்த வெள்ளத்தைப் பார்த்து, "பிரிய சிஷ்யனே, நீ பிராமணனல்ல. க்ஷத்திரியன்தான் இம்மாதிரி உடலுபத்திரவத்தைப் பொறுத்துக்கொண்டு அசையாமலிருக்க முடியும். உண்மையைச் சொல்" என்றார். அவனும் தான் பிராமண குலம் என்றது பொய்தான் என்றும் தேரோட்டியின் மகன் என்றும் ஒப்புக் கொண்டான். அதன்மேல் அவர் "நீ குருவை ஏமாற்றியபடியால் நீ கற்ற பிரம்மாஸ்திரம் மரணத் தறுவாயில் உனக்குப் பயன்படாமல் உன்னை ஏமாற்றும்; மறந்து போவாய்!" என்று சபித்து விட்டார்.

அவ்வாறே கர்ணன் கற்ற அந்த வித்தை உயிருள்ள வரையில் நினைவிலிருந்தும் யுத்தத்தில் அருச்சுனன் தாக்கும் சமயத்தில் மறந்து போயிற்று.

துரியோதனனுக்கு ஆப்த சிநேகிதனான கர்ணன் கடைசி வரையில் கௌரவர்களுடைய கட்சியிலேயே இருந்தான். பீஷ்மரும் துரோணரும் நீங்கிய பின் கர்ணன் கௌரவ சேனைக்குத் தலைவனாக இருந்து யுத்தத்தை இரண்டு நாள் அற்புதமாக நடத்தினான். முடிவில் தேர்ச் சக்கரம் மண்ணில் புதைந்து ரதம் ஓட்ட முடியாத சமயத்தில் அருச்சுனன் கர்ணனைக் கொன்றான். குந்தி தேவி துக்க சாகரத்தில் மூழ்கினாள்.

## விபரீதம்!



# வியாசர் விருந்து

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## கர்ணன்

பாண்டவர்களும் திருதராஷ்டிர புத்திரர்களும் முதலில் கிருபாசாரியரிடமும் பிறகு துரோணரிடமும் ஆயுதப் பயிற்சி பெற்றார்கள். ஒரு நாள் நகர ஜனங்களையெல்லாம் அழைத்து ஆயுதப் பயிற்சிப் பரீட்சையும் போட்டியும் ஏற்பாடு செய்தார்கள். பெருங் கூட்டம் கூடி விட்டது; எல்லாரைக் காட்டிலும் அதிக அற்புதமாக அருச்சுனன் தன் திறமையைக் காட்டித் திரண்டு கூடியிருந்த மக்களைப் பிரமிக்கச் செய்து கொண்டிருந்தான். துரியோதனனுக்குத் தாங்க முடியாத பொறாமை பொங்கிக் கொண்டிருந்தது.

அச்சமயத்தில் திடீர் என்று யாரோ தோள் தட்டிக் கொண்டு வரும் சத்தம் வாசற் பக்கத்திலிருந்து வந்தது. எல்லோரும் சத்தம் வந்த திக்கை நோக்கினார்கள். ஜனக் கூட்டம் வழி விட்டு விலக தேஜஸ் வீசும் தோற்றம் கொண்ட வாலிபன் ஒருவன் சபையில் நுழைந்தான். அவனே கர்ணன். சகோதரன் என்பதை அறியாமல் அருச்சுனனைப் பார்த்து "அருச்சுனா! நீ என்னவெல்லாம் செய்து காட்டினாயோ அதற்கு மேற்பட்டதாக நான் செய்து காட்டுகிறேன்" என்றான். இதைக் கேட்டதும் ஜனக் கூட்டம் உடனே எழுந்து ஆரவாரித்தது. துரியோதனனுடைய பொறாமை நிறைந்த மனதில் சந்தோஷம் தோன்றிற்று. கர்ணனைக் கட்டித் தழுவிக் கொண்டான். "என்னையும் என் ராஜ்யத்தையும் நீ இஷ்டப்படி உபயோகித்துக் கொள்ளலாம்" என்றான். கர்ணனும் "பிரபுவே! நான் அருச்சுனனுடன் தொந்த யுத்தம் கோரி வந்தேன்; உன்னுடன் சிநேகத்தை விரும்புகிறேன்" என்றான்.

கர்ணன் அறை கூவியதைக் கேட்டு அருச்சுனனுக்குக் கோபம் பொங்கி, "கர்ணா! சபைக்கு அழைக்கப்படாமல் வந்தவர்களும் கேட்கப்படாமல் பேசுகிறவர்களும் இகழப் படுவார்கள்!" என்று கொடுமையாகப் பேசினான். "பல்குனா! இந்தச் சபை எல்லாருக்கும் பொது. உனக்கே உரிமையானதல்ல. ராஜதருமம் பலத்தைப் பின் தொடர்ந்து செல்லும். வெறும் பேச்சில் என்ன பயன்? பாணங்களினால் பேசு" என்றான் கர்ணன்.

இவ்வாறு கர்ணன் அருச்சுனனை யுத்தத்துக்கு அழைத்ததும் ஜனக் கூட்டம் குதூகலங்கொண்டு இரண்டு கட்சியாகப் பிரிந்தது. ஸ்திரீகளிலுங் கூட இரண்டு பிரிவுகள் உண்டாயிற்று என்று வியாசர் சொல்லுகிறார்.

கர்ணனைப் பார்த்ததும் அடையாளம் கண்டு கொண்ட குந்தி மூர்ச்சை அடைந்தாள். விதுரன் வேலைக்காரிகளைக் கொண்டு உபசரித்து அவளைத் தேற்றினான். அவள் ஒன்றும் செய்யத் தோன்றாமல் திகைத்தாள்.

பிறகு கிருபாசாரியார் கர்ணனைப் பார்த்து, "பாண்டு புத்திரனும் குரு வம்சத்தைச் சேர்ந்தவனுமான அருச்சுனன் தொந்த யுத்தத்திற்குத் தயாராக இருக்கிறான். வீரனே! நீயும் உன் தாய் தந்தைகள் யார், நீ எந்த ராஜகுலத்தைப் பூஷிக்கிறாய் என்பதை எடுத்துச் சொல்வாயாக. குலமும் குலாசாரமும் தெரிந்துகொள்ளாமல் ராஜகுமாரர்கள் சம யுத்தம் செய்ய மாட்டார்கள்" என்று சொன்னார்.

இந்தச் சொல்லைக்கேட்ட கர்ணன் வெட்கத்தினால் தலை குனிந்தான். மழையில் நனைந்து வணங்கிய தாமரைபோல் அவன் முகம் விளங்கிற்று.

துரியோதனன் உடனே எழுந்து "நான் கர்ணனை அங்க தேசத்தின் ராஜாவாக அபிஷேகம் செய்வேன்" என்று சொல்லி பீஷ்மரையும் திருதராஷ்டிரனையும் அனுமதி கேட்டுச் சாமக்

கிரியைகளை அங்கேயே வரவழைத்துக் கிரீடம், ஹாரம், சிங்காசனம் முதலியவை எல்லாம் அமைத்துக் கர்ணனை அங்கதேச ராஜாவாக பட்டாபிஷேகம் செய்வித்தான். அந்தச் சமயத்தில் கர்ணனை வளர்த்த தேரோட்டிக் கிழவன் பயத்தினால் நடுங்கிக் கொண்டும் தடியூன்றிக் கொண்டும் சபையில் பிரவேசித்தான். அவனைப் பார்த்ததும் அங்கதேசாதிபதியாக அபிஷேகம் செய்யப்பட்ட கர்ணன் பிதாவினிடமுள்ள மரியாதைக்குக் கட்டுப்பட்டு வில்லைக் கீழே வைத்துவிட்டுத் தலை வணங்கி நமஸ்கரித்தான். அவனும் "புத்திரனே!" என்று சொல்லிக் கர்ணனைக் கட்டிக் கொண்டு அபிஷேக ஜலத்தினால் ஈரமாயிருந்த அவன் தலையில் ஆனந்தக் கண்ணீர் சொரிந்து இன்னும் ஈரமாக்கினான். பீமசேனன் இதைக் கண்டு கொல்லென்று சிரித்து, "தேரோட்டியின் மகனே! உன் குலத்துக்குத் தகுந்த குதிரைச் சவுக்கை எடுத்துக்கொள். நீ அருச்சுனனுடன் சமயுத்தம் செய்யத் தகுந்தவனல்ல" என்றான்.

சபையில் பெரிய குழப்பம் உண்டாயிற்று. அந்தச் சமயத்தில் சூரியனும் அஸ்தமனமானான். விளக்கு வெளிச்சத்தில் எல்லாரும் கூச்சல் போட்டுக் கொண்டு கலைந்தனர். சிலர் அருச்சுனன் பெயரையும் சிலர் கர்ணன் பெயரையும் சிலர் துரியோதனன் பெயரையும் அவரவர்களுடைய பட்ச பாதத்தின்படி சொல்லிக் கொண்டு போனார்கள். ஜனங்களுடைய சுபாவம் அக் காலத்திலும் இப்போதைப் போலவேதான் இருந்து வந்தது என்று இந்த சம்பவத்தைப் பற்றிய வியாசருடைய வர்ணனையிலிருந்து தெரிகிறது.



* * *

பிறகு ஒரு காலத்தில் தன் மகன் அருச்சுனனுக்குக் கர்ணனால் ஆபத்து வரும் என்று கண்ட இந்திரன் பிராமண வேஷம் தரித்துக் கொண்டு கொடையாளியாகிய கர்ணனிடம் வந்து அவனுடைய குண்டலங்களையும் கவசத்தையும் தானமாகக் கேட்டான். உன்னை மோசம் செய்யவே இந்திரன் இவ்வாறு வந்து கேட்பான் என்று சூரியபகவான் கனவில் வந்து கர்ணனை எச்சரிக்கை செய்திருந்த போதிலும், யாசகனாக வந்த ஒருவன் என்ன கேட்டாலும் மறுக்க இயலாத குணத்தைப் பெற்ற கர்ணன் கத்தியைக் கொண்டு தன் காதுகளையும் விலாப் புறங்களையும் அறுத்து உடன் பிறந்த குண்டலங்களையும் கவசத்தையும் எடுத்துப் பிராமணனுக்குக் கொடுத்து விட்டான்.

வரை கடத்ததுண்டா? நீதான் கேட்டதுண்டா? ரயில்வே கட்டணங்களை உயர்த்தினால் கூட்டம் சற்றுக் குறையும், நாமும் மூச்சுப் பிடிக்க இழுக்க வேண்டாம் என்று பார்த்தால் இப்படி அநியாயம் செய்து விட்டாரே? அப்படியாவது வேளா வேளைக்கு நல்ல ஆகாரமாவது கொடுக்கிறார்களா? அதுவும் கிடையாது. முன்பெல்லாம் சாப்பிடுவதற்கு நிலக்கரி கொடுத்துக் கொண்டிருந்தவர்கள் இப்பொழுது சவுக்குக் கட்டைதான் கொடுக்கிறார்கள்.

கிழ என்ஜின் :—ஆமாம், நீ உன் சௌகரியத்தைப் பற்றியே நினைக்கிறாயே ஒழிய, பொது ஜனங்கள் கோரிக்கைக்கு இது ஒன்றிலாவது சர்க்கார் இணங்கினார்களே என்று அவர்களை மெச்சினாயோ?

குட்டி என்ஜின் :—ஆமாம், நீதான் அவர்களை மெச்சணும். காந்திஜி முதலிய தலைவர்களை விடுதலை செய்யும்படி எல்லாரும் ஒரு முகமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார்களே, அந்தக் கோரிக்கைக்கு இணங்கினார்களா? தேசிய சர்க்கார் அமைக்க வேண்டும் என்று நாட்டில் உள்ள எல்லாக் கட்சியினரும், கட்சி யில்லாதவர்களும் அடித்துக் கொள்கிறார்களே, அந்தக் கோரிக்கைக்கு இணங்கினார்களா? மூடின கள்ளுக்கடைகளைத் திறக்க வேண்டாம் என்று தலைவர்களும் பொதுஜனங்களும் கேட்டுக் கொண்டார்களே, அந்தக் கோரிக்கைக்கு இணங்கினார்களா? இந்தப் பெர்தால் மெர்தால் முதலியவர்களுக்கு ஒரு ரூபாய்தான் சம்பளம் கொடுக்க வேண்டும் என்று சட்ட சபையில் சொன்னார்களே, அதை ஒப்புக் கொண்டார்களா?

என்னமோ, போ! எண்டா இந்தப் பாழும் என்ஜின் ஜன்மம் எடுத்தோம் என்றிருக்கிறது எனக்கு. யுத்தம் வந்தாலும் வந்தது, ராணுவஸ்தர்களை இழுத்து, இழுத்து எனக்குத் தாவு தீர்ந்து விட்டது. இந்த ராணுவஸ்தர்கள் எப்பொழுது பார்த்தாலும் கிழக்கும் மேற்கும், குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டிருக்கிறார்கள். "உங்கள் பிரயாணம் அவசியம்தானா?" என்று பொது ஜனங்களைக் கேட்கிறார்களே யொழிய இவர்களை யாரும் கேட்பதாகத் தெரியவில்லை. எங்கேயாவது மலைப் பள்ளத்தில் விழுந்து தற்கொலை செய்து கொண்டு விடலாமா என்றிருக்கிறது எனக்கு.

[குட்டி என்ஜின் பெரு மூச்சு" விடுகிறது. கொட்டகை முழுவதும் புகை சூழுகிறது.]

# என்ஜின் விட்ட கண்ணீர்

நாடோடி

[எஸ். ஐ. ஆர். ரயில்வே என்ஜின் கொட்டகை. கிழ என்ஜின் ஒன்று வெகு சாவகாசமாகப் புகை விட்டுக் கொண்டிருக்கிறது. அப்பொழுது இந்த என்ஜினின் பிள்ளையான குட்டி என்ஜின் கண்ணீரும்,கம்பலையுமாக அழுது கொண்டே உள்ளே நுழைகிறது. பிள்ளையாண்டானைப் பார்த்ததும் கிழ என்ஜின் திடுக்கிட்டுப் புகைவிடுவதை நிறுத்துகிறது.]

கிழ என்ஜின் :—என்டாப்பா, குழந்தை! என் இப்படி வீட்டுக்குள் காலடி வைக்கிற போதே அழுது கொண்டே நுழைகிறாய்? யார் உன்னை என்ன சொன்னார்கள்?

குட்டி என்ஜின் :—யார் என்னை என்ன சொல்லணும்? எல்லாம் என் தலை விதியை நினைத்துக் கொண்டுதான் கண்ணீர் விடுகிறேன்.

கிழ என்ஜின் :—அப்படி நீ அழும்படி உனக்கு என்னடாப்பா வந்து விட்டது? உன்னைச் சீரும், சிறப்புமாக நான் வளர்க்கவில்லையா? காலாகாலத்தில் வண்டி வண்டியாக நிலக்கரியும், குடம் குடமாகத் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றவில்லையா? கடைசியில் உன்னை இந்த எஸ். ஐ. ஆர். கம்பெனியில் வேலைக்குச் சேர்த்த போது, 'ஐயோ! போயும் போயும் நம் பிள்ளைக்குக் கம்பெனி வேலைதானா கிடைத்தது?' என்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுதோ அக்குறையும் நீங்கி விட்டது. இந்தக் கம்பெனியை சர்க்காரில் எடுத்துக்கொண்டு விட்டபடியால் நீ சர்க்கார் உத்தியோகஸ்தனாகி விட்டாய். எதற்காக வீணாக வருத்தப்படுகிறாய்?

குட்டி என்ஜின் :—ஆமாம், இந்த சர்க்கார் உத்தியோகத்தைப் பற்றி நீதான் பெருமை அடித்துக் கொள்ளவேண்டும்! 'எங்காத்துக் காரருக்கு அரண்மனையில் உத்தியோகம்' என்று இந்த மானிடர்கள் சொல்லுவார்களே, அதைப் போல இருக்கிறது நீ பேசுவது! சர்க்கார் உத்தியோகம் என்று பெருமையாகச் சொல்லுகிறாய். அப்படி இந்த சர்க்கார் தங்கள் ஊழியர்களாகிய நம்மை என்ன கவனித்து விட்டார்கள், கேட்கிறேன்!

கிழ என்ஜின் :—ஏன், கவனிக்காமல் என்ன?

குட்டி என்ஜின் :—ஆமாம், ரொம்ப கவனிக்கிறார்கள்! நீ பத்திரிகை வாசித்தால் தானே உனக்கு விஷயம் தெரியப் போகிறது?

கிழ என்ஜின் :—என்ன விஷயம், நீ தான் சொல்லேன்!

குட்டி என்ஜின் :—பெந்தால் என்று கேள்விப் பட்டிருக்கிறாயா?

கிழ என்ஜின் :—என்ன, மெந்தாலா? தலைவலி வந்தால் இந்த மானிடர்கள் உபயோகப் படுத்துவார்களே, ஒரு மருந்து, அதுவா?

குட்டி என்ஜின் :—அட ஈச்வரா! நான் அந்த மெந்தாலைப் பற்றிச் சொல்லவில்லை. நான் சொல்வது இந்திய ரயில்வே மந்திரி பெந்தாலைப் பற்றி. ஆனால் பெந்தாலைப்பற்றி நினைத்தாலே எனக்கு மெந்தால் வேண்டியிருக்கும் போலிருக்கு.

கிழ என்ஜின் :—ஏன், என்ன சமாசாரம்?

குட்டி என்ஜின் :—என்ன சமாசாரமா? இதுவரையில் இந்திய சர்க்கார் சரித்திரத்திலேயே நடக்காத ஒரு காரியத்தைச் செய்து நம் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டிருக்கிறாரே அவர்! அது தெரியாதா, உனக்கு? எல்லா ரயில் என்ஜின்களும் இதைச் சொல்லித்தான் கண்ணீர் விட்டுக் கொண்டிருக்கின்றன. ரயில்வே கட்டணங்களை 25 சத விகிதம் உயர்த்தப் போகிறேன் என்று சொல்லி விட்டு, கடைசியில் பொதுஜன அபிப்பிராயத்துக்காக உயர்த்தாமல் விட்டு விட்டாரே?

பொது ஜனங்கள் கோரிக்கைக்கு இணங்கும் அநியாயம் இந்திய சரித்திரத்திலேயே இது



# ஆகாச வெடி

"தேசிய வார விழாவை ஒட்டி குரத்தில் காந்திஜி இருக்கும் ஆகாகான் அரண்மனையைப்போல் ஓர் இடம் தயாரித்திருக்கிறார்கள். வேடிக்கை பார்ப்பதற்காக வெளியூர்களிலிருந்து ஆயிரக்கணக்கான பேர்கள் வருகிறார்கள்."

—ஒரு செய்தி.

ஆகாகான் அரண்மனைகள் எத்தனை வேண்டுமானாலும் தயாரித்து விடலாம்; ஆனால் காந்திஜிக்கு எங்கே போவது?

★

"கட்டைத் தொட்டியில் தீ!"

—தினசரி.



அதற்கென்ன? கரியாக விற்று விட்டால் போகிறது!

★

"திருப்பதி மலை ரோடைத் திறந்துவைத்த சென்னை கவர்னர் ஜப்பானியர்களைச் சீக்கிரமே தோற்கடித்து விடலாம் என்று கூறினார்." —ஒரு செய்தி.

அப்படித் தோற்கடித்ததும், மணிபூர் மலை ரோடை மறுபடி திறந்து வைப்பதற்குச் சென்னை கவர்னரையே அழைப்பார்கள் என்று நம்புகிறோம்.

★

"இந்தியாவிலிருந்து மத்திய கிழக்கு நாடுகளுக்கு 14 லட்சத்துக்கு மேல் பெறுமானமுள்ள தங்கத்தை எடுத்துச் சென்ற 70 அராபியர்கள் கைதியானார்கள்."

—ஒரு செய்தி.

இப்படியெல்லாம் தங்கம் இந்தியாவை விட்டுப் போகும்போது நேயர்கள் "கல்கி" அட்டையைத் தங்கத்தில் போடச் சொல்லிக் கேட்டால் எப்படிச் சாத்தியமாகும்?

★

"சென்னை நகரசபைக் கூட்டத்தில் திடீரென்று ஸ்ரீ தாமோதரம் நாயுடுவுக்கும், ஸ்ரீ செங்கல்வராயருக்குமிடையே வார்த்தைகள் முற்றிப் பெரிய சண்டை மூண்டு விட்டது. கமிஷனர் தலையிட்டுச் 'சண்டை'யை விலக்கினார்."

—சென்னைச் செய்தி.

போலீஸ் கமிஷனரின் காரியத்தை நகர சபைக் கமிஷனர் செய்ததின் பொருட்டு, அவர்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப் படுமென்று நம்புகிறோம்.

★

"பாஜௌர் எல்லைப்புறத்தில் ஒரு நிலத்தில் ஏராளமான தங்க நாணயங்களும் பிறகு ஒரு சிலையும் கண்டெடுக்கப் பட்டன."

—பெஷாவர் செய்தி.

ஒரேயடியாக அவ்வளவு தங்க நாணயங்களையும் முதலில் கண்ட ஆசாமிதான் ஸ்தம்பித்துச் சிலையாகப் போயிருக்க வேண்டும்!

★

"ரிப்பன் கட்டடத்திலுள்ள மேயர் அறையில் நேற்று ஒரு திருடன் புகுந்தான். அங்கே நகரத்தில் வெள்ளத்தினால் கஷ்டமடைந்த ஏழைகளுக்குக் கொடுப்பதற்காக வைத்திருந்த துணிகளை எடுக்க முயற்சித்தான்."

—தினசரி

வெள்ளத்தில் கஷ்டப்பட்ட ஏழைகளில் அந்தத் திருடனும் ஒருவனோ என்னமோ!



★

## வீண் வேலை!

ஒருவர்:—என்ன நாயுடுகாரு! எங்கே கிளம்பறுப்பலே?

நாயுடு:—எலெக்ஷன்தான் வந்துவிட்டதே! நம்ம சுப்புவைப் போய் வோட்டுக் கேட்கலாம் என்று புறப்பட்டேன்.

ஒருவர்:—போயும் போயும் சுப்புவையா? அவன் சுத்த கருமியாச்சே? பிறத்தியாருக்கு ஒண்ணும் கொடுக்கமாட்டானே?

★

# ஆசிரமத் திருமணம்



மயிலாப்பூர் லஸ் சர்ச் ரோட்டில் உள்ள பிரசித்தி பெற்ற "ஆசிரம"த்தில் சென்ற 10—4—44ல் ஒரு பிரபல திருமணம் நடந்தது. ("ஆசிரமம்" என்பது, தர்ம தாதா என்று புகழ் பெற்ற ஸர் வி. கிருஷ்ணசாமி ஐயருடைய பங்களாவின் பெயர்.) மணமகள் சௌபாக்கியவதி கலாவதி, ஸர் வி. கிருஷ்ணசாமி ஐயரின் பேத்தி; "மெட்ராஸ் லா ஜர்னல்" சொந்தக்காரரும், தமிழ் மொழிக்கு அரும்பெரும் தொண்டு செய்து வரும் "கலைமகள்" ஆசிரியருமான ஸ்ரீ ஆர். நாராயணசாமி ஐயரின் செல்வப் புதல்வி. மணமகன் ஸ்ரீ ஏ. கே. ரங்கநாதய்யரின் புதல்வரான சிரஞ்சீவி ஏ. ஆர். ராஜகோபாலன்.

"ஆசிரம"த்தில் நடக்கும் திருமணங்களில் சாதாரணமாக ஆயிரக்கணக்கான அதிதிகளுக்கு விருந்து அளிப்பது வழக்கம். இவ் வருஷம் 'அரிசி ரேஷன்' காரணமாக அந்த வழக்கத்தை நிறைவேற்ற முடியவில்லை யென்ற குறையைத் தவிர, மற்றப்படி சகல சிறப்புக்களுடன் திருமணம் இனிது நடந்தேறியது.

ஏற்பட்டால், அவர்கள் என்ன செய்வார்கள்?

முதலில் சிறையிலுள்ள காந்திஜி முதலிய தலைவர்களை விடுதலை செய்வார்கள்.

பிறகு, காங்கிரஸ் தலைவர்களையும், முஸ்லிம் லீக் தலைவர்களையும், ஸப்ரு முதலிய இன்னும் சில ராஜிப் பேச்சுத் தலைவர்களையும் அழைத்து, "இதோ, உங்கள் நாட்டுக்கு அபாயம் வந்திருக்கிறது; வட மேற்கு எல்லையில் ஜப்பானியப் பகைவர்கள் வந்திருக்கிறார்கள்; இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பையும், இந்தியாவைப் பாதுகாக்கும் பொறுப்பையும் நீங்களே ஏற்றுக் கொள்ளுங்கள். எங்கள் உதவி வேண்டுமென்றால் இருக்கிறோம்; இல்லாவிட்டால் கம்பி நீட்டுகிறோம்" என்பார்கள்.

மேற்படி காரியத்தை வெகு காலம் முன்னதாகவே பிரிட்டிஷார் செய்திருக்க வேண்டும். அவ்விதம் அவர்கள் செய்யாததின் காரணம் அவர்களுக்கு நல்ல புத்தி உதயமாகாததுதான். இதைப் பற்றி முன்னர் ஏதாவது சந்தேகம் இருந்திருந்தாலும் இப்போது சிறிதும் சந்தேகம் இல்லாமல் போய் விட்டது.

இந்தியாவைத் திறமையாகப் பாதுகாக்கக் கூடிய அரசாங்கம் தேசத் தலைவர்களின் அரசாங்கந்தான் என்று தெளிவாகத் தெரிந்து விட்டது.

ஜப்பானியருக்கு அஸ்ஸாம் எல்லைக்குள் புகும் துணிச்சல் எவ்விதம் ஏற்பட்டது?

சீனாவில் ஜப்பானியர் தோல்வியடைந்து வருகிறார்கள்; பஸிபிக் தீவுகளில் தோல்வி மேல் தோல்வி அடைந்து வருகிறார்கள்.

ஆஸ்திரேலியாவுக்கு எவ்வளவோ அருகில் நெருங்கியவர்கள், அந் நாட்டுக்குள் படையெடுக்கத் துணிச்சலின்றிப் பின் வாங்கி வருகிறார்கள்.

இந்தியாவுக்குள் பிரவேசிக்கும் தைரியம் மட்டும் அவர்களுக்கு எவ்விதம் ஏற்பட்டது?

ஜப்பானியர் பர்மாவின்மேல் படையெடுத்த போது, "திடீரென்று வந்து விட்டார்கள்! நாம் ஆயத்தமாக இல்லை" என்று காரணம் சொல்லக் கூடியதாக இருந்தது.

அஸ்ஸாமைப் பற்றி அவ்விதம் சொல்வதற்கில்லை.

ஜப்பானியர் யுத்தம் தொடங்கி இரண்டு வருஷத்துக்கு மேலாகிறது; அவர்கள் பர்மாவுக்கு வந்து உட்கார்ந்து ஒன்றரை வருஷத்துக்கு மேலாகிறது.

இந்தியாவில் யுத்த ஆயத்தங்களோ ஏக தடபுடலாக, ரயில்களி லெல்லாம் அசாத்தியமான இட நெருக்கடியை ஏற்படுத்திக் கொண்டு, வருஷக் கணக்காக நடந்து வருகிறது.

"ஜப்பானியர் கடல் யுத்தத்திலும், ஆகாச யுத்தத்திலும் அவ்வளவு பிரமாத கெட்டிக்காரர்கள் அல்ல; ஆனால் தரை யுத்தத்தில் பலே கைகாரர்கள்" என்று ஒரு பெரிய மகத்தான உண்மையைப் புதிதாகக் கண்டு பிடித்துச் சொல்கிறார்கள்!

ஜப்பானியர்கள் தரை யுத்தத்தில் சூரர்கள் என்றால், நமது சீக்கியர்களும் கூர்க்கர்களும் ராஜ புத்திரர்களும் மகாராஷ்டிரர்களும் செந்தமிழ் நாட்டு வீர மறவர்களும் தரை யுத்தத்தில் யாருக்கும் சளைக்கிறவர்கள் அல்ல.

இவர்களுக்குச் சகாயமாக பிரிட்டிஷ் படைகளும் அமெரிக்கப் படைகளும் ஆப்பிரிக்காவிலிருந்து நீகிரோப் படைகளும் வந்திருக்கின்றன.

இதற்கெல்லாம் மேலாகக் கீழ் நாட்டுப் போரைத் தலைமை வகித்து நடத்துவதற்கு சாக்ஷாத் மவுண்ட்பேட்டனே மேளதாளத்துடன் வந்து பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

அஸ்ஸாமிலுள்ள நமது ஸைன்யங்களுக்காகச் சிற்றுண்டிக் கடை ('காண்டீன்') காண்டிராக்ட் எடுத்த ஒருவர் 12 லட்சம் ரூபாய் சம்பாதித்திருப்பதாகச் சொல்லப்படுகிறது.

இவ்வளவெல்லாம் மும்முரமான ஆயத்தங்கள் நடந்திருக்கும் போது, ஜப்பானியர் அஸ்ஸாமுக்குள் புகுவதற்கு எப்படித் துணிந்தார்கள்?

அஸ்ஸாமில் புகுந்த ஜப்பானியர் அப்படியொன்றும் முன்னேறிக் கிழித்து விடுவார்கள் என்று நாம் கருதவில்லை. சில ரோடுகளை வெட்டுவதைத் தவிர மற்றப்படி அவர்களை ஒன்றையும் வெட்டி முறித்துவிடப் போவதில்லை. சீக்கிரத்திலேயே அவர்கள் நமது படைகளிடம் உதை வாங்கிக் கொண்டு திரும்பிப் போக வேண்டியவர்கள்தான்.

இன்னும் பதினைந்து நாளில் தளபதி 'மான்ஸூன்' எனப்படும் பருவ மழை வந்து ஜப்பானியரைப் பிய்த்து இழுக்கப்போகிறதென்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. அவர்கள் திரும்பி ஓடும்போது சேற்றிலும் சகதியிலும் திண்டாடப் போகிறார்கள் என்பது நிச்சயம். தலையிலே இடி விழுந்தும், தரையிலே சறுக்கி விழுந்தும், மழையிலே ஜல தோஷம் பிடித்தும் அவர்கள் சாகத்தான் போகிறார்கள்.

எது எப்படியானாலும் முடிவிலே நமக்குத்தான் வெற்றி என்பதைப்பற்றி எள்ளளவும் சந்தேக மில்லை.

எனினும், இந்தியாவிலே இவ்வளவு யுத்த ஆயத்தங்கள் நடந்திருக்கும் போது ஜப்பானியர் அஸ்ஸாமிலே புகத் துணிந்தார்கள் என்பதை நினைக்கையில் நமக்கு என்னமோ செய்கிறது.

"அவர்கள் அப்படிப் புகுந்ததற்குக் காரணம் அரசியல் காரணந்தான்" என்று நமது மேன்மை தங்கிய சென்னை கவர்னர் ஸர் ஆர்தர் ஹோப் சமீபத்தில் கண்டு பிடித்துக் கூறினார்.

அதை நாம் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்கிறோம்.

யுத்தத்தில் ஜயிக்கும் எண்ணத்துடன் ஜப்பானியர் அஸ்ஸாமில் புகுந்திருக்க முடியாது.

அரசியல் காரணத்துக்காகவே அவர்கள் புகுந்திருக்க வேண்டும்.

சென்னை கவர்னர் குறிப்பிட்ட 'அரசியல் காரண'மாவது என்ன?

இந்தியாவில் சுயராஜ்யம் இல்லை, தேசிய சர்க்கார் இல்லை என்பதுதான்.

அந்தக் காரணத்துக்கு இன்னும் தூபம் போட்டு விட்டு, இந்தியப் பொது மக்களின் மனதில் உள்ள அதிருப்தியைப் பெருக்கி, யுத்த முயற்சிகளைத் தடை செய்யலாம் என்பதுதான் ஜப்பானியர் அஸ்ஸாமில் புகுந்ததின் நோக்கமாயிருக்க வேண்டும். இதைத்தான் 'அரசியல் காரணம்' என்று சென்னை கவர்னர் குறிப்பிட்டிருக்கிறார்.

மேற்படி அரசியல் காரணத்தை நீக்குவது பிரிட்டிஷ் இராஜ தந்திரிகளின் கையிலேதான் இருக்கிறது.

அவர்களுக்கு நல்ல புத்தி மட்டும் உதயமாக வேண்டும். உதயமானால், அடுத்த நிமிஷமே உண்மையான தேசத் தலைவர்களை அழைத்து தேசிய சர்க்காரை ஏற்படுத்தலாம். ஜப்பான் படையெடுப்புக்குரிய அரசியல் காரணத்தைப் போக்கலாம்.

இவ்விதம் நடந்தால், அது புதிய தாரண வருஷத்தில் நடக்கும் முதல்தர அசாதாரண சம்பவமாயிருக்கும்.

அடுத்தபடியாக, இந்த வருஷத்தில் நடக்கக் கூடிய அசாதாரண சம்பவம் நமது அரசியல் தலைவர்கள் ஒன்றுபட்டு விடுவதுதான்.

இத்தகைய ஒற்றுமை யில்லாததினால் இந்தியா தேசம் அடைந்திருக்கும் கஷ்ட நஷ்டங்களுக்குச் சென்ற இரண்டாயிரம் வருஷத்துச் சரித்திரம் சாட்சி சொல்கின்றது.

நமக்குள் சண்டை போட்டுக் கொண்டு அன்னியர்கள் வரும்போது சும்மா இருந்து விடுவோம். அன்னியர் ஆட்சி பலப்படுவதற்கும் சகல உதவிகளும் செய்வோம். பின்னர், அன்னிய ஆட்சியின் கொடுமைகளை அநுபவித்துக் கஷ்டப்படுவோம்.

இன்னொரு அன்னியன் மறுபடியும் படையெடுத்துவரும்போது, "இவனும் அவனும் சண்டை போட்டுக் கொண்டு சாகட்டும்! பிறகு இராஜ்யம் தானே நமக்கு வந்து விடும்!" என்று எண்ணிச் சும்மா யிருப்போம். முதல் அன்னியனை ஜயித்த இரண்டாவது அன்னியன் அதே இடத்தில் அழுத்தமாக உட்கார்ந்து கொள்வான்.

இம்மாதிரி இந்திய சரித்திரத்தில் ஆயிரக் கணக்கான உதாரணங்கள் இருக்கின்றன. ஆயினும், நம்மில் சிலர் இன்னமும் ஒற்றுமையின் அவசியத்தை உணரவில்லை. நம்முடைய சொந்த பலத்தைக் கொண்டு நாம் சுதந்திரம் பெற்றால்தான் பெற்றது, அன்னியர் படை யெடுப்பை நம்பினால் மறுபடியும் அடிமைத் தனந்தான் என்பதை உணரவில்லை.

சரித்திரம் கற்பிக்கும் மேற்படி உண்மையை நமது அரசியல் தலைவர்கள் உணர்ந்து ஒற்றுமையான சுதந்திரக் கோரிக்கையைச் சமர்ப்பித்தால் அது ஒரு மகத்தான அசாதாரண சம்பவமாகவே இருக்கும்.

மேற்கூறிய இரண்டு அசாதாரண சம்பவங்களில் ஏதாவது ஒன்று இந்தத் தாரண வருஷத்தில் நடைபெறவேண்டுமென்பதே புது வருஷத்தில் நமது முதல் பிரார்த்தனையாகும்.

# தாரண வருஷம்

ஆண்டுக்கு ஒரு தடவை கணக்காகப் புது வருஷம் பிறந்து விடுவதை நினைத்தால் ஆச்சரியமாய்த்தா னிருக்கிறது. அதிலும், பிறக்கும் போதே புதிய பெயரைச் சூட்டிக்கொண்டல்லவா பிறக்கிறது!

இந்தச் சித்திரை முதல் தேதியில் பிறந்திருக்கும் தமிழ் வருஷத்துக்குத் தாரண வருஷம் என்று பெயர்.

புதிய தாரண வருஷம் வெறும் சாதாரண வருஷமா யிருக்குமா? அல்லது அபூர்வ சம்பவங்கள் நிகழும் அசாதாரண வருஷமா யிருக்குமா?

பஞ்சாங்கத்தில் என்ன போட்டிருக்கிறது என்று நாம் பார்க்க வில்லை. ஜோதிடர்கள் என்ன சொல்கிறார்கள் என்றும் நமக்குத் தெரியாது.

ஆனால் இந்தத் தாரண வருஷம் சாதாரண வருஷமா யிருந்தால் தேச நிலை எப்படி யிருக்கும், அசாதாரண வருஷமா யிருந்தால் தேசத்தில் என்னென்ன நடக்கும் என்று நாம் உத்தேசமாய்ச் சொல்லக் கூடும்.

தாரண வருஷம் வெறும் சாதாரண வருஷமா யிருக்கும் பட்சத்தில்,

1. வைஸராய் வேவல் தேசத்தில் குறுக்கும் நெடுக்குமாய்ப் போய்க் கொண்டிருப்பார்.

2. தளபதி ஆகின்லக் அங்குமிங்குமாய் அலைந்து கொண்டிருப்பார்.

3. அஸ்ஸாமில் புகுந்த ஜப்பானியர் முன்னுக்கும் போக முடியாமல் பின்னாலும் திரும்ப முடியாமல் மலையிலும் காட்டிலும் திண்டாடிக் கொண்டிருப்பார்கள்.

4. பர்மாவில் புகுந்த பிரிட்டிஷ்—இந்தியப் படைகள் ஒரு நாளைக்கு ஒரு அடி முன்னேறுவதும் மறு நாளைக்குப் பன்னிரண்டு அங்குலம் பின் வாங்குவதுமாக இருப்பார்கள்.

5. லார்ட் மவுண்ட்பாட்டன் அவருடைய 465-வது யுத்த அறிக்கையைப் புது வருஷத்தின் கடைசித் தேதியில் வெளியிடுவார்.

6. மகாத்மாஜி ஆகாகான் அரண்மனையில் தவம் செய்து கொண்டிருப்பார். ஜவாஹர்லால்ஜி சிறைக் கூடத்தின் சுவர்களுடன் பேசிக் கொண்டிருப்பார்.

7. கட்சியில்லாதார் மகாநாடு கூடிப் பல முக்கிய தீர்மானங்களைச் செய்துவிட்டுச் சேதமில்லாமல் கலைவார்கள்.

8. வைஸராய் நிர்வாக சபையின் இந்திய அங்கத்தினர் தலைக்கு ஒரு சுற்று அதிகமாகப் பெருத்துப் போவார்கள்.

9. சென்னை மாகாண அட்வைஸரி சர்க்கார் பணத்தொந்தி விழுந்து அவஸ்தைப்படுவார்கள். வசூலிக்கிற வரிப் பணத்தைச் செலவழிப்பதற்கு அவர்களுக்கும் வழி தெரியாது; பிறர் யோசனை சொன்னாலும் கேட்க மாட்டார்கள்.

இப்படியாக, எல்லாக் காரியங்களும் வழக்கம்போல், மாமூல்படி, சாவதானமாக நடந்து கொண்டிருக்கும்; முந்நூற்றறுபத்தைந்து நாட்களும் எப்படியோ பறந்து போய்விடும்.

வருஷம் முடிந்ததும் பார்த்தால், தமிழர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு வயது கூடிப் போயிருக்கும்.

ஆனால், இப்போது பிறந்திருக்கும் தாரண வருஷம் அசாதாரண வருஷமா யிருக்கும் பட்சத்தில் என்ன நடக்கும் என்று கேட்டால், நடக்கக் கூடிய அசாதாரண சம்பவங்களில் மிகவும் முக்கியமானவை இவைதான்:—

1. பிரிட்டிஷ் இராஜ தந்திரிகளுக்கு இந்தியா விஷயத்தில் நல்ல புத்தி உதயமாகி விடும்.

2. இந்திய அரசியல் வாதிகளுக்குள் இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கை விஷயத்தில் ஒற்றுமை ஏற்பட்டு விடும்.

மேற்படி இரண்டு அசாதாரண சம்பவங்களும் இந்தத் தாரண வருஷத்தில் நிகழுமானால், இந்தியா உத்தாரணமடைவது மட்டுமல்ல;—உலகத்தின் புனருத்தாரணத்திற்கே வழி ஏற்பட்டு விட்டதென்று சொல்லலாம்.

மேற்கூறிய இரண்டு அசாதாரண சம்பவங்களில் முதல் சம்பவம் நேர்ந்தால் அதன் பலாபலன்கள் எப்படியிருக்குமென்று பார்ப்போம்.

பிரிட்டிஷ் இராஜ தந்திரிகளுக்கு இந்தியா விஷயத்தில் நல்ல புத்தி

-உம்மன்




நாளது ஏப்ரல் 6, 7, 8உ களில் லட்சுமணபுரியில் கட்சியில்லாதார் மகாநாடு கூடி, பலதீர்மானங்களை நிறைவேற்றி விட்டுக் கலைந்தது.




நாளது ஏப்ரல் 7உ பம்பாயில் அகில இந்திய ஸ்திரீகள் மகாநாடு கூடி அதன் விகிதத்துக்குப்பல தீர்மானங்களை நிறை வேற்றி விட்டுக் கலைந்தது.




அஸ்ஸாமில் ஜப்பானியர். புகுந்திருக்கும் இந்தச் சமயத்திலும், இந்திய அதிகாரவர்க்கத்தார் யுத்தத்தைநடத்துவதற்கு அவசரச் சட்டத்தை அதிகமாக நம்பியிருப்பதாகத் தெரிகிறது.

மலைமேல் உபதேசம் (புது மாதிரி)

பக்தர்களே, நல்லவர்களை நிக்ரஹம் செய்பவர்கள்தான் பகவான் அருளைப் பெறுவார்கள். சமாதானத்தை விரும்புபவர்களைச் சிறையில் அடைப்பவர்கள்தான் கடவுளின் கிருபைக்குப் பாத்திரமாவார்கள். அவர்களையே ஆண்டவன் ஆசீர்வதிப்பார்! உதாரணத்துக்கு என் இந்திய நிர்வாகத்தைப் பார்த்துக்கொள்ளுங்கள்!

(பக்தர்களின் பலமான இடைவிடாத கரகோஷம்)

மாஜி வைஸராய் லின்லித்கோவுக்கு இங்கிலாந்தின் சர்ச் நிர்வாகத்தில் பெரிய உத்தியோகம் கிடைத்திருப்பதாக அறிவிக்கப்படுகிறது.

# மயிலை சங்கீத சபா

## மகத்தான சங்கீத விருந்து —முதல் சங்கீத விழாவின் கடைசி நிகழ்ச்சி

### அகில இந்திய சங்கீத காங்கிரஸிற்குப் பிறகு மதராஸில் நடக்கும் முதல் கச்சேரி



கோகிலகான ஸ்ரீமதி

| | |
|---|---|
| M. S. சுப்புலக்ஷ்மி | — பாட்டு |
| ஸ்ரீ T. D சங்கரய்யர் | — பிடில் |
| கல்பாத்தி ராமநாதன் | — மிருதங்கம் |
| மதராஸ் வேணு நாயக்கர் | — கஞ்சிரா |



**ஞாயிற்றுக்கிழமை 30-4-44 மாலை 5-30-க்கு மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூலில்**

★

டிக்கெட் விவரங்கள் :—ரூ. 10/-, ரூ. 5/-, 3/-, 1/-. ரிசர்வ் செய்ய ரூ. 1/- பிரத்தியேகம்.

சௌகரியமான இடம். சுகமாக உட்காரக் கூடிய வசதிகள். வெளியூர்களிலிருந்து கடிதங்கள் வருவதை முன்னிட்டு சபா காரியாலயத்தில் ஆபீஸ் நேரங்களில் இப்போது முதற்கொண்டே இடங்கள் ரிசர்வ் செய்ய ஏற்பாடு செய்துள்ளோம். அவரவர்கள் தங்கள் சௌகரியத்தை உத்தேசித்து 96, பிராடீஸ் ரோடு, மயிலாப்பூரில் இப்போதே தங்கள் இடத்துக்கு ரிசர்வ் செய்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

## ஒலியை பிரதி பலிப்பதில் சிறப்புற்றது



சுமார் ஐம்பது வருஷங்களாக நமது நாட்டின் சங்கீத கலைஞர்களின் இன்னிசையை உண்மையாக பிரதி பலிக்கும் பொறுப்பும், பெருமையும் "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்" வைச் சார்ந்து வருகிறது. ஆகவே, சுத்தமான நாதமும், சிறந்த சப்த பிரதி பலமும் "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்" உரிமையாகும். இதே கொள்கையை "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்" ரேடியோ கிராமபோன்களும், ரேடியோ ரிஸீவர்களும் பின்பற்றி, தமது ஒலிபரப்பால் வித்வான்களின் மனதை கவருவது போல் சங்கீத பிரியர்களின் மனதையும் கவரும்.

# "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

## ரேடியோ ரிஸீவர்கள்
## ரேடியோ கிராமபோன்கள்

தற்போது ரேடியோ கிராமபோன்கள் கைவசம் இல்லையென்றும், சில ரேடியோ ரிஸீவர்கள் மட்டுமே உள்ளன வென்றும் தெரிவிக்க தயங்குகிறோம்.



ஸ்ரீ. வேங்கடசாமி நாட்டார்.

வர். அவருடன் சிறிது பழகியவர்களுங் கூட அவருடைய இனிய சுபாவத்துக்குக் கட்டுப் பட்டவர்களாகி விடுவார்கள். காலஞ் சென்ற நாட்டாரின் குடும்பத்தாருக்கும், அவரிடம் மாணவர்களாயிருந்து தமிழ்க் கல்வி பயின்ற ஆயிரக்கணக்கான தமிழர்களுக்கும், பொதுவாகத் தமிழ் நாட்டுக்கும் நமது மனமார்ந்த அநுதாபங்கள்.

தமிழ்த்தாயின் மற்ருெரு பெரிய நஷ்டம், திருப்பனந்தாள் மடாதிபதியாக இருந்து நீண்டகாலம் தமிழ் மொழிக்கு எத்தனையோ விதத்தில் தொண்டு புரிந்துவந்த ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான் அவர்கள் சிவபதம் அடைந்ததாகும். தமிழை வளர்ப்பதற்குப் புதிது புதிதாகவும் விதம் விதமாகவும் மேற்படி சுவாமிகள் பற்பல வழிகளைக் கண்டு பிடித்தார். எத்தனை எத்தனையோ பரிசுகளை ஏற்படுத்தினுர். இவருடைய ஆட்சியில் "திருப்பனந்தாள் மடம் தமிழ் வளர்க்கும் மடம்" என்று புகழ்பெற்றது. அந்தப் புகழானது புதிதாகப் பட்டத்துக்கு வந்திருக்கும் ஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் அவர்களின் ஆட்சியில் இன்னும் சிறந்தோங்கும் என்று நம்புகிருேம்.

## மற்ருெரு பிரிவு

மற்ருெரு துயரந்தரும் செய்தியையும் இந்த இதழில் நாம் குறிப்பிட வேண்டியதாயிருக்கிறது. மியூஸிக் அகாடமி எனப்படும் சங்கித வித்வத் சபையின் கௌரவ காரியதரிசிகளில் ஒருவராயிருந்து பல வருஷ காலம் மிகத் திறமையுடன் அகாடமியின் கணக்கு வழக்குகளைக் கவனித்து வந்த ஸ்ரீ எல். கிருஷ்ணசாமி ஐயர் சில தினங்களுக்கு முன்பு காலமானுர் என்று அறிகிருேம். இவர், பெயர் புகழுக்கு ஆசைப்படாமலும் ஆடம்பரமில்லாமலும் பொதுக் காரியங்களில் ஊக்கத்துடன் ஈடுபடும் பெருங் குணம் படைத்தவர். கண்டிப்புக்கும் கருருக்கும் பெயர்போன ஸ்ரீ கே. வி. கிருஷ்ணசாமி ஐயரின் கீழ் வேலை பார்ப்பது, அதிலும் வரவு செலவுக் கணக்கை நிர்வகித்து நல்ல பெயர் எடுப்பது, மிகவும் அரிய காரியமாகும். அப்படிப்பட்ட நல்ல பெயரை நீடித்து வாங்கியவரின் அகால மரணம் சங்கீத வித்வத் சபைக்குப் பெரு நஷ்டம் என்று சொல்ல வேண்டியதில்லை. பிரசித்தி பெற்ற வடமொழி வித்வான் ஸ்ரீ லக்ஷ்மண சூரி அவர்களின் புதல்வர் ஸ்ரீ எல். கிருஷ்ணசாமி ஐயர்; நண்பர் ஸ்ரீ டி. எல். வேங்கடராமய்யரின் இளைய சகோதரர். மியூஸிக் அகாடமிக்கும் ஸ்ரீ டி. எல். வெங்கட்ராமய்யருக்கும் நமது இருதய பூர்வமான அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிருேம்.

## "தங்கக் கல்கி"

தமிழ் வளர்த்த குற்ருலத்தில் ஒரு தமிழ்க் குழந்தை ஏப்ரல் மீ 2உ "கல்கி"யைப் பார்த்தும் "தங்கக் கல்கி வந்திருக்கு!" என்று கூறியதாம். இந்தக் குழந்தையைப் போலவே பெரியவர்கள் பலரும் தங்கக் கல்கியை மனமுவந்து பாராட்டியிருப்பதுடன், வாரக் "கல்கி"க்கு வாழ்த்துக் கூறி வரவேற்றிருக்கிருர்கள். அவர்கள் எல்லாருக்கும் நமது மனப்பூர்வமான வந்தனம்.

சில நேயர்கள், "கல்கி"க்கு எப்போதும் தங்க அட்டையே போடக் கூடாதா என்று கேட்டிருக்கிருர்கள். தேசத்தில் தற்சமயம் தங்கம் படுகிற பாட்டில், சர்க்காரே தங்கத்தை விற்று லாபம் சம்பாதித்துக் கொண்டிருக்கும் நிலையில், "கல்கி"யின் ஒவ்வொரு இதழ் அட்டைக்கும் தங்க மசி கிடைப்பது எளிய காரியமல்லவென்பதை மேற்படி நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிருேம். உள் விஷயங்களைப் பற்றிய வரையில் "கல்கி" எப்போதும் தங்கமான கல்கியாக இருந்து வருவதற்கு இடைவிடாத பிரயத்தனம் செய்து கொண்டிருப்போம்.




---

ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழில் வெளியான "யாருக்கு மருந்து?" என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: சி. ஆர். சீதாராமன், மயிலாப்பூர், சென்னை.



# கல்கி

மலர் 3 } தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் { இதழ் 27

# என்ன சேதி?

## கத்திக்கு வேலை

கத்தி பிடித்தவனுடைய கை சும்மா இராது; எதையாவது வெட்டிக்கொண்டிருக்கும். வெட்டுவதற்கு ஒன்றும் அகப்படாவிட்டால் தன் விரலையாவது வெட்டிக் கொள்ளும்! சென்னை அரசாங்கத்தின் நிலை இப்போது அப்படித்தான் இருக்கிறதென்று தோன்றுகிறது. அவர்கள் கையில் அடக்குமுறை ஆயுதங்கள் இருக்கின்றன. ஆனால் அவற்றை எப்படி உபயோகப் படுத்துவதென்று தெரியவில்லை. உபயோகப் படுத்துவதற்குரிய சந்தர்ப்பங்கள் கிடைக்கவில்லை. ஆயுதமோ துருப்பிடித்துப் போய்க் கொண்டிருக்கிறது! என்ன செய்வது? காரணம் இருக்கிறதோ, இல்லையோ, எதன்மேலாவது ஆயுதத்தைக் கூர் பார்க்கத் தீர்மானித்தார்கள்! "ஆ! மகாத்மா காந்தி எழுதிய புத்தகமா? அவர் மாணவர்களுக்காக எழுதியதா? போடு அதன்மேல்!" என்றார்கள். "மாணவருக்கு" என்ற தலைப்புடன் புதுமைப் பதிப்பகத்தார் வெளியிட்ட மகாத்மாவின் புத்தகத்தைப் பறிமுதல் செய்ய உத்தர விட்டார்கள்! மேற்படி பறிமுதல் உத்தரவுக்கு வேறு காரணம் எதுவும் இருக்கக் கூடுமென்று தோன்றவில்லை. மாணவர்களுக்கு ஒழுக்கத்தையும், சன்மார்க்கத்தையும் போதிக்கும் கட்டுரைகளைப் பெரும்பாலும் கொண்ட புத்தகத்தை வேறு எதற்காகப் பறிமுதல் செய்ய வேண்டும்? இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தை அதன் மேல் ஏன் பிரயோகிக்க வேண்டும்? மேற்படி புத்தகத்தினாலே யுத்த நடவடிக்கைகள் எந்த விதத்தில் தடைப்பட்டு விடுமென்று சென்னை சர்க்கார் பயப்படுகிறார்கள்?— அப்படி அவர்கள் ஒரு புத்தகத்துக்குப் பயப்படுகிறதா யிருந்தால், வைஸராய் வேவலையும், சேனாபதி ஆகின்லக்கையும் அகௌரவப் படுத்துவதாக வல்லவா ஆகிறது? இதையெல்லாம் நன்கு யோசித்துச் சென்னை சர்க்கார் மேற்படி புத்தகப் பறிமுதல் உத்தரவை உடனே வாபஸ் பெற வேண்டுமென்று கோருகிறோம். அப்புறம் அவர்கள் இஷ்டம்.



## தமிழ்த் தாயின் நஷ்டம்

தமிழுக்கு எத்தனையோ விதங்களில் அதிர்ஷ்டம் அடித்துக் கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் இரண்டு பெரிய நஷ்டங்களைப் பற்றிக் குறிப்பிட வேண்டியிருப்பது நமக்கு மிகுந்த துயரத்தையளிக்கிறது. தற்காலத்துத் தலைசிறந்த தமிழ்ப் புலவர்களில் ஒருவராக விளங்கிய திருவாளர் வேங்கடசாமிநாட்டார் காலஞ் சென்றது தமிழ்த் தாய் அடைந்த பெரு நஷ்டமாகும். திரு நாட்டார் தமிழ்க் களஞ்சியமா யிருந்ததோடு குணக் களஞ்சியமாகவும் விளங்கிய

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 3 } இதழ் 27 }

*1944 ஏப்ரல் 16*

{ தாரண ௵ { சித்திரை 4









இராமர் வாழ்க! சீதை வாழ்க! லவகுசர்களும் வால்மீகியும் வாழ்க! இந்தக் கலியுகத்தில் "ராமராஜ்ய"த்தை சிருஷ்டித்த டைரக்டர் விஜயபட்டும், சித்திரக்காரர் கனுதேஸாயும் நீடூழி வாழ்க!

"ராமராஜ்யம்" என்னும் ஹிந்தி பேசும் படம் சென்னை ஸாகர் டாக்கீஸில் பத்து வாரங்கள் ஓடிப் பதினோராவது வாரமும் ஓடப்போகிறது. ஆயிரக் கணக்கான ஜனங்கள் கூடி, தினந்தோறும் கொட்டகையில் இட நெருக்கடி உண்டு பண்ணி வருகின்றனர்.

தமிழ் நாட்டு மக்களுக்கு ஆபாசக் காட்சிகளும், அசந்தர்ப்ப ஹாஸ்யங்களும் உள்ள டாக்கிகள் தான் பிடிக்கும் என்பது வீண் அபாண்டம், பொய், அவதூறு என்பதை "ராமராஜ்யம்" என்னும் படம் ஐயமற நிரூபித்து வருவது குறித்து அளவு கடந்த மகிழ்ச்சியடைகிறோம். அத்தகைய அற்புதமான படத்தில் சீதையாக நடிக்கும் பாக்கியம் பெற்ற ஸ்ரீ ஸோபனா ஸமார்த்தின் படம் இந்த அட்டையை அலங்கரிக்கிறது.



மிகவும் குளிர்ச்சியுடையது!

களைப்பை போக்குகிறது!

உத்ஸாகத்தை அளிக்கிறது!



வினோலியா உபயோகித்து ஸ்நானம் செய்தால் குளிர்ச்சி உண்டாகும் போது நீங்கள் ஏன் வெப்பத்தினால் கஷ்டப்பட வேண்டும். இந்த சோப்பின் வெண்ணிறம் வாய்ந்த நுரை உங்களை சுத்தமாக்கும் பொழுது ஏன் வியர்வையுடன் இருக்கவேண்டும். வினோலியா சோப்பின் வாசனை சுறு சுறுப்பையும், உத்ஸாகத்தையும் உண்டுபண்ணி, மனதிற்கு சுகத்தையும் அளிக்கிறது.

# வினோலியா
## ஒயிட் ரோஸ் சோப்பு




VWR. 17-60 TM

VINOLIA CO. LIMITED, LONDON, ENGLAND

